HINTS FOR HEALTH



# A Cool & Clean Bath

## Goes a long way

ஆற்றிலோ, குளத்திலோ, கிணற்றடியிலோ அல்லது குழாயின் கீழோ குளிர்ந்த நேரங்களிலே சுத்தமாக ஸ்நானம் செய்வதுதான் ஆரோக்யத்துக்கும் தீர்க்காயுளுக்கும் நேரான வழி என்பதை அறிவீர்கள். எளிதாகவும் இன்னும் ரஞ்சகமாகவும், ஸ்நானம் செய்ய உதவுவது மலபார் லிம்டா சோப்.

இதன் நுரை சருமத்திற்குள் வெகு தூரம் சென்று அசுத்தங்களைப் போக்கி, சருமத்தை மிருதுவாக்கி, உங்களுக்கு அலாதி மேனி அழகு அளிக்கிறது. உங்களுக்கு ஏற்ற சோப் அதுவே.



FAS L 6.




மலபார்

# லிம்டா சோப்

வெஜிடபில் சோப் ஒர்க்ஸ்

கள்ளிக் கோட்டை

ப்ரோப்ரைடர்ஸ்: கே. L.N.P.&Co., LTD. கள்ளிக்கோட்டை. பம்பாய் 2. சென்னை 1.

# பேனா உலகில் ஒரு அதிசயம்!



நிக்கல் ஸில்வர் மூடி

ஐந்து நிறங்கள்





தங்கத்தைப் போன்ற முனையுடன் ஸ்ட்ரீம் லைன்

நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பேனா இதுதான். ஐந்தே ரூபாய்க்கு மிகவும் அழகாய் செய்யப்பட்ட கோல்டன் பிளாட்டினம் பௌண்டன் பேனா என்றால் மிகவும் மலிவல்லவா? கவர்ச்சிகரமான ஐந்து நிறங்களில் வருகிறது. தூசி அடைவதைத் தடுத்து சரளமாக எழுதச் செய்வதில் பெயர் பெற்ற "தங்கம் போன்ற" முனையுடன் கூடியது. மிகவும் பொருத்தமாகவும் அழகாகவும் இயந்திரத்தினால் வார்க்கப்பட்ட நிக்கல் ஸில்வர் மூடியுடன் கூடியது. உங்களுக்கேற்ற பேனா இதுதான்!

**ரூ. 5/-**

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

## புதிய கோல்டன்

# Platignum

REGD

"தங்கத்தைப் போன்றது"

வர்த்தக விசாரணைகளுக்கு முழு உரிமைபெற்ற வினியோகஸ்தர்கள்:

**முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட், 15, கங்குராம செட்டித் தெரு, மதராஸ்**

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 7 | இதழ் 48 | ஜூன் 27 | சர்வதாரி ஆனி 14






"என்னுடைய இளமைப் பிராயத்தில் தென்னாட்டில் சதிர்க் கச்சேரிகளை ஒழிக்கும் இயக்கம் ஒன்று தீவிரமாக நடந்தது. அந்த இயக்கத்தை நானும் ஆதரித்தேன். ஆனால் இயக்கம் வெற்றிபெறவில்லை. அது வெற்றி பெறாமற்போனது தமிழ் நாட்டின் அதிர்ஷ்டம் என்று சொல்ல வேண்டும். ஏனெனில் சதிர்க் கச்சேரிகளில் ஆடப்பட்டு வந்த பரத நாட்டியம் ஓர் அற்புதமான கலையென்றும் நமது முன்னோர்கள் நமக்கு அளித்துச் சென்ற அருஞ் செல்வம் என்றும் இப்போது தெரிய வந்திருக்கின்றன. பரத நாட்டியம் மறைந்திருந்தால் நாம் மகத்தான நஷ்டம் அடைந்திருப்போம்."—இவ்விதம் கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் சில தினங்களுக்கு முன்பு பந்தநல்லூர் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்கு நடந்த உபசரிப்புக் கூட்டத்துக்குச் செய்தி அனுப்பியிருந்தார்.




இன்னொரு சமயம் பரதநாட்டியத்தைப் பற்றி ராஜாஜி கூறியதாவது:—"உலகத்தில் இரண்டு விதமான அற்புதங்கள் இருக்கின்றன. ஒன்று சிருஷ்டியின் புதுமையினால் தோன்றும் அற்புதம். இன்னொன்று பழைய காரியமாயிருந்தாலும் தினம் தினம் பார்க்கும்போதெல்லாம் புதிய அழகு தோன்றும் அற்புதம். பரதநாட்டியம் இரண்டாவது வகை அற்புதத்தைச் சேர்ந்தது."

இப்படி ராஜாஜி அவர்களினால் பாராட்டப்பட்ட பரத நாட்டியக் கலை தமிழ் நாட்டில் சென்ற சில காலமாகப் பெரும்பாலும் வளர்ச்சி பெற்று வருகிறது. இந்தக் கலை வளர்ச்சியின் பயனைப் பூரணமாகப் பெற்ற பேபி கமலாவின் பெயர் அரங்கமேடையிலும் வெள்ளித் திரையிலும் புகழ் பெற்றிருக்கிறது. இந்தப் பூவுலகத்துக்கு வரும்போதே நடனமாடிக் கொண்டு வந்த குழந்தை பேபி கமலா. இயற்கையிலேயே நடன சக்தியைப் பெற்ற பாக்கியசாலி. சின்னஞ் சிறு குழந்தையாயிருந்தபோதே நடனம் பயின்று சில தமிழ் சினிமாக்களில் தன் திறமையைக் காட்டினாள். 1943-ம் ஆண்டில் வெளியான முதல் 'கல்கி' தீபாவளி மலரில் "பேபி கமலாவின் நடனத் தோற்றங்கள்" வெளியிடப் பட்டன. அது முதல் அவளுடைய நடனக் கலைத்திறன் நாளுக்கு நாள் வருஷத்துக்கு வருஷம் வளர்ந்து வந்திருக்கிறது. ஆசிரியர் வழுவூர் ராமையாப் பிள்ளையிடம் முறைப்படி பரதநாட்டியம் பயிலத் தொடங்கியபின் இந்தக் குழந்தையின் கலைத்திறன் பெரிதும் மேன்மையடைந்து இன்று தமிழ் நாட்டில் மிகச் சிறந்த நடன கலைவாணியாக பேபி கமலா விளங்குகிறாள்.

பேபி கமலாவைச் சீக்கிரத்தில் "பேபி கமலா" என்று அழைக்க முடியாமல் போய் விடலாம். "குமாரி கமலா" என்றோ "ஸ்ரீமதி கமலா" என்றோ குறிப்பிட வேண்டியிருக்கலாம். எனினும் இந்த அதிசயக் குழந்தையின் கலைத்திறன் என்றும் மாறாத சோபையுடன் விளங்கி நீடூழி சுடர்விட்டுப் பிரகாசிக்கட்டும் என்று ஆசி கூறுகிறோம்.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 48

# என்ன சேதி?

## பிரிட்டன் ஒன்று நினைக்க...!

பல வருஷங்களுக்கு முன் பிரிட்டிஷார் பர்மாவை இந்தியாவிலிருந்து பிரித்தார்கள். இந்தியா சுதந்திரம் அடைந்தாலும் இயற்கைச் செல்வம் நிறைந்த பர்மாவையாவது கைநழுவ விடாமல் வைத்துக் கொள்ளலாம் என்று அவர்கள் நினைத்தனர். ஆனால் அவர்கள் நினைத்ததற்கு நேர்மாறாகக் காரியங்கள் நடந்து வருகின்றன. சென்ற மகா யுத்தத்துக்குப் பின் பர்மாவில் ஏற்பட்ட சுதந்திர எழுச்சியை அடக்க முடியாததால், பர்மாவுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டிய நிர்ப்பந்தம் பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டது. பர்மா சுதந்திரம் பெற்று விட்டாலும் அந்த நாட்டில் தங்களுடைய பொருளாதார ஆதிக்கத்தையாவது நிலைநிறுத்திக் கொள்ளலாம் என்று பிரிட்டிஷார் ஆறுதல் அடைந்தனர். ஆனால் பிறகு பர்மாவில் நிகழ்ந்துள்ள சம்பவங்கள் அந்த எண்ணத்திலும் மண்ணைப் போட்டு விட்டன. பர்மா பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு உட்பட்ட நாடாக இருக்க விரும்பவில்லை. சமீப காலமாக பர்மா சர்க்கார் அங்குள்ள சில பெரிய பிரிட்டிஷ் கம்பெனிகளையும் தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக்கொண்டு விட்டார்கள். இவையெல்லாம் போதாதென்று பர்மா பிரதம மந்திரி ஸ்ரீ தாகின் நூ இப்போது ஒரு பெரிய வெடிகுண்டைப் போட்டிருப்பது குறிப்பாக பிரிட்டிஷாரை மிகுந்த கலக்கத்துக்கு உள்ளாக்கியிருக்கிறது.

பர்மா பிரதம மந்திரி சமீபத்தில் விடுத்த அறிக்கையொன்றில், பர்மா ருஷ்யாவுடன் பொருளாதார, அரசியல் சம்பந்தம் வைத்துக்கொள்ள விரும்புகிறதென்றும், பர்மியத் தலைவர்கள் பொது உடைமைக் கொள்கையையே பின்பற்ற விரும்புகிறார்கள் என்றும் கூறியது பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் மிகுந்த அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. உலகில் பொது உடைமைக் கொள்கை பரவாமல் தடுப்பதற்காகக் கோடிக்கணக்கில் செலவழித்து வரும் அமெரிக்காவுக்கும், அமெரிக்காவைப் பின்பற்றும் பிரிட்டனுக்கும் பர்மாவின் கூற்று அதிர்ச்சியைக் கொடுக்காமல் என்ன செய்யும்?

## மகத்தான கொந்தளிப்பு

பிரிட்டிஷாருக்குப் பூலோக சொர்க்கமாக இருந்துவந்த மலாய்நாட்டிலும் இப்போது மகத்தான கொந்தளிப்பு ஆரம்பமாகியிருக்கிறது. அதன் விளைவாக இந்தியர்கள், சீனர்கள், மலாய்க்காரர்கள் உள்பட நூற்றுக் கணக்கானவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். ரப்பர்த் தோட்டங்களில் மானேஜர்களாக இருக்கும் ஆங்கிலேயர்கள் தோட்டங்களை விட்டு வெளியேறி ஓடும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அங்கு ஏற்பட்டுள்ள கொந்தளிப்புக்குப் பொது உடைமைக் கட்சியினர்தான் காரணமென்று மலாயாவிலுள்ள பிரிட்டிஷ் அதிகாரிகள் கூறுகின்றனர். மேற்படி கொந்தளிப்பில் முதல் வெற்றி பொது உடைமைக்காரர்களுக்குத்தான் கிடைத்திருக்கிறது என்று மலாயா பத்திரிகைகள் குறிப்பிடுகின்றன.

அந்த நாட்டில் ஏற்பட்டுள்ள கொந்தளிப்புக்குப் பொது உடைமைக்காரர்கள்தான் காரணம் என்று கூறும் அதிகாரிகள், அத்தகைய கொந்தளிப்பு ஏற்படாமல் தடுக்க என்ன செய்தார்கள்? பொறுப்பாட்சி வழங்குகிறோம் என்று கூறி ஓர் அரசியல் திட்டத்தைத் தயாரித்தார்கள். மலாயா 'பார்லிமெண்'டில் பெரும்பாலோரைத் தங்கள் இஷ்டப்படி நியமனம் செய்யப் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு மேற்படி திட்டம் இடம் அளிக்கிறதெனில் அதன் யோக்கியதையைப் பற்றி அதிகம் கூறத் தேவையில்லை!

## தடுக்க வழி யென்ன?

ஐரோப்பிய நாடுகளில் பொது உடைமைக் கொள்கை பரவாமல் தடுப்பதற்காக அமெரிக்கா ஒவ்வொரு நாட்டுக்கும் ஏராளமான தொகை கொடுத்து வருகிறது. அந்த நாடுகளில் பொருளாதார சுபிட்சம் ஏற்படுவதற்காகவே அவ்வாறு உதவி செய்வதாகவும், பொது உடைமைக் கொள்கை பரவாமல் தடுக்க அது தான் உற்ற வழி யென்றும் அமெரிக்க சர்க்கார் தலைவர்கள் கூறுகின்றனர். அப்படி யிருக்க அரசியல் சுதந்திரமும் பொருளாதார சுபிட்சமும் இல்லாத மலாயாவில் பொது உடைமைக் கொள்கை பரவி வருவதில் ஆச்சரியம் என்ன? எனவே, மலாயாவில் மாத்திரமல்ல, அடுத்துள்ள இந்தோனேஷ்யா, இந்தோசீனா முதலிய ஆசிய நாடுகளிலும் பொது உடைமைக் கொள்கை பரவாமல் தடுக்க வேண்டுமாயின், அந்த நாடுகள் முதலாவதாக அரசியல் சுதந்திரம் பெற வேண்டும். அடுத்தபடியாக அந்த பொருளாதார சுபிட்சமும் ஏற்பட பிரிட்டன், அமெரிக்கா முதலிய வல்லரசுகள் உதவி புரிய வேண்டும். சமீபத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு குறிப்பிட்டதுபோல் பொருளாதார ஆதிக்க நோக்கம்கொண்டு வல்லரசுகள் உதவியளிப்பதால் பலன் ஏற்படாது. மலாயாவிலுள்ள தோட்ட முதலாளிகள் கோருவதுபோல் ராணுவ ஆட்சி முறையினாலும் மேற்படி கொந்தளிப்பை நிரந்தரமாக அடக்கிவிட முடியாது.

## எல்லையுண்டா?

ஒப்பற்ற தலைவரும், முஸ்லிம் திலகங்களில் ஒருவருமான எல்லைப்புற காந்தி கான் அப்துல் கபார்கானுக்கு வடமேற்கு எல்லைப்புற மாகாண சர்க்கார் மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை விதித்திருக்கின்றனர். கபார்கான் புதல்வர் உள்பட பல பிரமுகர்களை மேற்படி சர்க்கார் கைது செய்திருக்கிறார்கள். எல்லைப்புறத்தில் கலகத்தைத் தூண்டி விடுவதற்காக இப்பீர் பக்கியுடன் சதியாலோசனை செய்தார் என்பதே கபார்கான் மீது சாட்டப்பட்ட குற்றமாகும்! பட்டாணியர்களின் பரம விரோதிகளான பிரிட்டிஷாரையும் முறை தவறி எதிர்க்க விரும்பாதவரும், சாத்வீக மூர்த்தியும், உயர்ந்த ஒழுக்கமும் பண்பாடும் உள்ளவருமான கபார்கான்மீது அத்தகைய குற்றம் சாட்டிய ஒரு சர்க்காரின் நேர்மையைக் குறித்து என்ன சொல்வது? அதிலும் காஷ்மீரத்திலுள்ள நிரபராதிகளைச் சூறையாடவும் கொலை செய்யவும் கொள்ளைக்காரர்களைத் தூண்டிவிட்டு உதவியும் புரிந்து வரும் பாகிஸ்தான் சர்க்கார், கபார்கான்மீது அத்தகைய குற்றம் சாட்டியது வெட்கக்கேடாகும்.

பாகிஸ்தான் சர்க்காரின் நிர்வாகத்திலுள்ள ஊழல்களைப் பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையில் கபார்கான் அம்பலப்படுத்திய போதே அவர்மீது பாகிஸ்தான் தலைவர்களுக்கு ஆத்திரம் ஏற்பட்டது. அந்த ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளவும், மிகுந்த செல்வாக்குள்ள கபார்கானிடம் கொண்ட பயத்தினாலுமே பாகிஸ்தான் சர்க்கார் அவரைச் சிறைப்படுத்தத் துணிந்தனர். உத்தம தேச பக்தரும், தியாகியுமான அவர் பிரிட்டிஷாரின் அடக்கு முறைக்கு இலக்காகி வைர உறுதி பெற்றவராதலால், பாகிஸ்தானின் எதேச்சாதிகார வெறி பிடித்த செய்கையைக் கண்டு அஞ்சமாட்டார். எனினும், கபார்கான் விஷயத்தில் இனிகொண்டு அவருக்குக் கடுங்காவல் விதித்ததன் மூலம் பாகிஸ்தான் சர்க்கார் தங்களுடைய பலவீனத்தையும், தங்களுடைய எதேச்சாதிகாரத்துக்கு எல்லையில்லை என்பதையும் உலகம் சிரிக்கக் காட்டியிருக்கிறார்கள்.

## பிரிவுத் துயர்

தென்னாட்டின் பெருந் தனவந்தரும் செட்டிநாட்டு அரசரும் அண்ணாமலை சர்வ கலாசாலை ஸ்தாபகரும் தமிழிசை இயக்கத் தலைவரும் பல ஆலயத் திருப்பணிகள் செய்தவரும் இணையில்லாக் கொடை வள்ளலுமான ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் நாளது ஜூன் மீ 15உ இம் மண்ணுலகை நீத்துப் பொன்னுலகை அடைந்தார். அவருடைய பிரிவு தமிழ் நாட்டிலுள்ள அனைவருக்கும் முக்கியமாகத் தமிழ் அன்பர்கள் எல்லாருக்கும் அளவிலாத துன்பத்தை அளித்திருக்கிறது. இத்தகைய ஒப்பற்ற புகழ்வாய்ந்த தந்தையைப் பிரிந்து துயரக் கடலில் ஆழ்ந்திருக்கும் அவருடைய புதல்வர்களான குமார ராஜா எம். ஏ. முத்தையாச் செட்டியார், ஸ்ரீ ராமநாதன் செட்டியார், ஸ்ரீ சிதம்பரம் செட்டியார் ஆகியவர்களுக்கும் மற்றும் பந்துமித்திரர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

# சிவபதம் அடைந்தார்



ஜனனம்: 30-9-1881 சிவபதம்: 15-6-1948

# வேலை தொடங்கினர்!



# கதை முடிந்தது!

"வானம் இடிந்து விழுந்தாலும் பூமி வெடித்துப் பிளந்தாலும் குறிப்பிட்ட தேதியில் அரசியல் நிர்ணய சபை கூடியே தீரும்" என்று சர்தார் வல்லபாய் பட்டேல் ஒன்றரை வருஷத்துக்கு முன்னால் சபதம் செய்தார்.

அவ்வாறே குறிப்பிட்ட நாளில் இந்திய அரசியல் நிர்ணய மகாசபை கூடியது. அத் தினத்தில் அந்தக் கூட்டம் நடவாமல் தடுப்பதற்காக நிகழ்ந்த சூழ்ச்சிகள் படுதோல்வியடைந்தன.

ஆயினுமென்ன? அந்த மகாசபை கூடிய பிறகு ஏற்பட்ட சம்பவங்களை நினைக்கும்போது உதிரம் கொதிக்கின்றது; உள்ளம் நடுங்குகின்றது.

வானம் இடிந்து விழுவதும் பூமி பிளப்பதும்தான் மகத்தான உற்பாதங்கள் என்றும், அவற்றைக் காட்டிலும் கோரமான சம்பவங்கள் நிகழ்வது முடியாத காரியம் என்றும் அதற்கு முன் எல்லோரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால், வானம் இடிந்து விழுவதையும் பூமி வெடித்துப் பிளப்பதையும் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக பயங்கரமான சம்பவங்கள் பாரத நாட்டைக் கலக்கிவிட்டன; பாரத நாட்டு மக்களை மனம் துடிக்கும்படி செய்துவிட்டன.

மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்ட இயற்கை உற்பாதங்கள் நேர்ந்திருந்தால், இந்தியா மிகுந்த கஷ்டத்திற்குள்ளாகியிருக்கும்; என்றாலும் இந்தியாவின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்பட்டிராது; இந்தியாவின் பெருமைக்கு இழுக்கு நேர்ந்திராது.

அகண்ட உலகமும் கண்டும் கேட்டுமிராத அதிசயிக்கத் தக்க அறப்போரில் பாரதநாடு வெற்றி பெற்று வான்புகழ் கொண்டது. அதற்குத் திருஷ்டி பரிகாரமாக, உலகமே கண்டு நடுங்கும்படியான சம்பவங்களும் இந்தியாவை ஆட்டி வைத்து, இந்திய சரித்திரத்தின் ஓர் அத்தியாயத்தைக் கறைபடச் செய்துவிட்டன.

அத்தகைய கோர நிகழ்ச்சிகளுக்கிடையே ஆத்ம பலமற்ற நாடுகளாயிருப்பின், புரட்சிப் பிரளயத்தினால் மூழ்கடிக்கப்பட்டு முற்றிலும் நிலைகுலைந்து போயிருக்கும்.

ஆனால், ஆத்ம பலம் வாய்ந்த பாரத தேசம், அஞ்சா நெஞ்சம் படைத்த தலைவர்களைக் கொண்ட நமது புண்ணிய பூமி அவற்றையெல்லாம் ஒருவாறு சமாளித்து வெற்றி பெற்றது.

• • •

பெரும் வெள்ளத்தை அணை போட்டுத் தடுக்க முடியுமா? ஆனால் அதைக் காட்டிலும் அதிக பயங்கரமான வகுப்பு வெறி என்னும் வெள்ளத்தை நமது தலைவர்கள் அணை போட்டுத் தடுத்தார்கள். மேற்குப் பஞ்சாபில் மூண்ட வகுப்பு வெறியின் பைசாச நடனத்தைக் கண்டு மனம் கொதிப்படைந்த மகா ஜனங்களுக்கு இடைவிடாது ஹிதோபதேசம் செய்து, அந்த வெறி தேசமெங்கும் வியாபித்து அழிவை உண்டாக்காமல் தடுத்தார்கள். அந்த வெறிக்கு இலக்காகி மடிந்த பல்லாயிரக் கணக்கானவர்கள் போக, சொத்து சுதந்திரம், வீடுவாசல் எல்லாவற்றையும் இழந்து வாழ்வு குலைந்து இந்தியாவுக்கு ஓடி வந்து சரண் புகுந்த அரைக் கோடி ஜனங்கள் மீண்டும் புது வாழ்வு நடத்த வகை செய்தார்கள்.

காந்தி மகாத்மாவின் கோர மரணத்தினால் சோகக் கடலில் ஆழ்ந்து ஆத்திரம் கொண்ட மகாஜனங்கள், செய்வது இன்னதென்று தோன்றாது அராஜகத்துக்கு இரையாகி விடாமல் காப்பாற்றினார்கள்.

பாரத நாட்டை இரு துண்டுகளாக்கி, அதிலும் ஒன்றை அறுநூறு துண்டுகளாக்கி பிரிட்டிஷார் சுதந்திரம் அளித்தார்கள் அல்லவா? அந்த அறுநூறு துண்டுகளும் பிய்த்துக் கொண்டு கிளம்பி தனிச் சுதந்திரம் ஸ்தாபிக்க முற்பட்டு விடுமோ என்று தேச மக்கள் கவலை கொண்டனர். சில சமஸ்தான மன்னர்கள் 'சுதந்திர' பேரிகை கொட்டவும் தயாராயினர்!

ஆனால், ஒரு துளிகூட இரத்தம் சிந்தாமல், துப்பாக்கியால் ஒரு தடவை கூடச் சுடாமல் சமரசமாக மேற்படி அறுநூறு சமஸ்தானங்களையும் இந்தியாவுடன் பிணைந்த இந்திய சர்க்காரின்

பெருமைக்கும், ராஜதந்திரத் திறமைக்கும் உலக சரித்திரத்தில் இணையே இல்லை என்பதை உலகப் பிரசித்தி பெற்ற வெளிநாட்டுப் பத்திரிகைகளும் ஒப்புக்கொள்கின்றன.

எனினும், மேற்கூறிய பல்வேறு மகத்தான காரியங்களையும் சாதித்த இந்திய சர்க்கார், அறுநூறு நாடுகளில் ஒன்ருன ஹைதராபாத்தை மாத்திரம் வழிக்குக் கொண்டு வர முடியாமற் போனது மிகவும் வருந்தத் தக்க விஷயமாகும்.

ஹைதராபாத் நைஜாமின் மூர்க்கத்தனமான பிடிவாதமானது, எவ்வித சமரசமும் ஏற்பட முடியாமல் செய்து விட்டது.

தென் கிழக்கு ஆசியா யுத்தத்திலும், இந்தியாவில் சுதந்திர சர்க்காரை அமைக்கும் முயற்சியிலும் வெற்றி பெற்று இந்தியாவின் நன்மதிப்புக்கும் உலக நாடுகளின் பாராட்டுதலுக்கும் பாத்திரரான லார்டு மவுண்ட் பாட்டன் கூட, நைஜாமை வழிக்குக் கொண்டு வருவதில் வெற்றி பெற முடியவில்லை என்ருல், நைஜாமின் பிடிவாதம் எத்தகையது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

• • •

சென்ற பத்து மாதங்களாக நடந்து வந்த இந்தியா-ஹைதராபாத் சமரசப் பேச்சு வார்த்தைகள் கடைசியாக முறிந்து விட்டன.

ஆதி முதல் நைஜாமின் போக்கை அறிந்தவர்கள் மேற்படி வார்த்தைகள் முறிந்ததைக் குறித்து ஆச்சரியப்பட மாட்டார்கள். முறியாமல் இருந்திருந்தால் தான் அவர்களுடைய ஆச்சரியம் அளவு கடந்து போயிருக்கும்.

இந்திய சர்க்கார் பிரதிநிதிகளுக்கும் நைஜாம் பிரதிநிதிகளுக்கும் பேச்சு வார்த்தைகள் முடிந்து நகல் திட்டமும் தயாராயிற்று. அதை அங்கீகரித்து நைஜாமின் நகல் பிரகடனமும் தயாராயிற்று. இத்தனை சடங்குகள் நடந்த பின்னரும் கூட, நைஜாமின் சகுனிகள் கடைசி க்ஷணத்தில் அவரது மனதை மாற்றி விட்டார்கள்.

நைஜாம் பிரதிநிதிகள் எண்ணிக்கையற்ற தடவை டில்லிக்கு யாத்திரை செய்தனர். ஒவ்வொரு தடவையும் அவர்கள் இந்திய சர்க்காரின் நியாயமான வாதங்களை அங்கீகரிப்பதும், பிறகு ஹைதராபாத்துக்குச் சென்றபின் அடியோடு வக்கரித்துக் கொள்வதும் வழக்கமாக இருந்துவந்த தென்பதை பண்டித ஜவாஹர்லால் நேரு, மேற்படி சமரசப் பேச்சு முறிவை யொட்டி விடுத்துள்ள அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர்.

மற்றும் அஷ்டதிசைகளிலிருந்தும் ஆயுதங்களை வாங்கிச் சேகரிப்பதில் ஹைதராபாத் சென்ற பல மாதங்களாக எவ்வளவு மும்முரமாக இருந்து வந்திருக்கிறது என்பதையும் ஜவாஹர்லால்ஜி எடுத்துக் கூறியிருக்கிருர்.

நைஜாம் நல்லெண்ணம் கொண்டவராயின் எதற்காக யுத்த தளவாடங்களைச் சேகரிக்க வேண்டும்?

• • •

நைஜாம் ஹைதராபாத்துக்குச் சுதந்திரம் கோருவது தான் விந்தையிலும் விந்தையாக இருக்கிறது.

நைஜாம் சுதந்திரம் கோருவது யாருக்காக? தமக்காகவா அல்லது தமது கொள்ளைக்காரர்களின் தலைவரான காஸிம் ரஸ்விக்காகவா?

நைஜாம் ஹைதராபாத்திலுள்ள ஜனங்களுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று கூறவில்லை. தமது பிரஜைகளில் எண்பது சதவிகிதத்துக்கு மேற்பட்ட ஹிந்துக்களுக்கு நிர்வாகத்தில் சிறிதளவும் பங்கு அளிக்காத நைஜாம், — பொறுப்பாட்சி என்ற வார்த்தையைக் காதால் கேட்ட மாத்திரத்தில் பீதியடையும் நைஜாம், தமது சமஸ்தானத்திலுள்ள பெரும்பாலோருக்காகச் சுதந்திரம் கோரவில்லை.

சரி, நைஜாம் பிரஜைகளின் சுதந்திரம் ஒரு புறமிருக்கட்டும். நைஜாம் ஆட்சி ஏற்பட்டது முதல் என்றைக்காவது அவருக்குச் சுதந்திரம் இருந்தது உண்டா?

ஹைதராபாத் சமஸ்தானபதிகள் சென்ற நூற்றைம்பது வருஷ காலமாக பிரிட்டிஷாருக்குப் பரம தாசர்களாக இருந்து வந்திருக்கிருர்கள். இந்தியர்களின் சுதந்திரப் போரை நசுக்குவதற்காகப் பிரிட்டிஷாருக்குத் துருப்புகள் கொடுத்தும் உதவியிருக்கிருர்கள்.

ஒரு சமயம் நைஜாம் பிரிட்டிஷ் சர்க்காருடன் சம அந்தஸ்து கோரினர். அப்போது இந்தியாவில் வைஸ்ராயாக இருந்த லார்டு ரீடிங், பிரிட்டிஷாரின் தயவின்றி நைஜாம் ஆட்சி புரிய முடியாதென்பதை பட்டவர்த்தனமாக இடித்துக் காட்டவே, நைஜாமும் 'அச்சா' என்று கூறி, லார்டு ரீடிங்குக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் ஒரு பெரிய ஸலாம் செய்துவிட்டு வாளா விருந்தார்!

அப்படிப்பட்ட நைஜாம்தான் தமக்குப் பரம்பரையாகச் சுதந்திரம் உண்டென்றும், தம்முடைய சுதந்திரத்தில் தலையிட இந்திய சர்க்காருக்கு உரிமையில்லை என்றும் இப்போது ஆர்ப்பாட்டம் செய்கிறார்!

திப்பு சுல்தானையும் ஹைதர் அலியையும் தோற்கடிப்பதற்காகப் பிரிட்டிஷாருக்குத் துணை புரிந்து தம்முடைய எதேச்சாதிகாரத்தை ஸ்தாபித்துக் கொண்ட நைஜாமுக்கு உதவி புரிய இஸ்லாமிய உலகம் முழுதும் திரண்டு வரும் என்று காஸிம் ரஸ்வி கூறுவதும் காரியப் பைத்தியமேயாகும்.

நைஜாம் கோஷ்டியின் எதேச்சாதிகார உரிமைகளைக் காட்டிலும் ஹைதராபாத் சமஸ்தானப் பிரஜைகளின் உரிமைகள் அதிக நேர்மையும் முக்கியத்துவமும் வாய்ந்தவை என்பதை ரஸ்வி உணர்ந்திருந்தால், அவர் இஸ்லாமிய உலகை ஏமாற்றுவதற்கு மேற்படி கேவலமான முறையைக் கையாள முற்பட்டிருக்க மாட்டார்!

* * *

இந்தியா - ஹைதராபாத் சர்க்கார்களின் பிரதிநிதிகள் ஏகமனதாக அங்கீகரித்த ஒப்பந்த நகலைக் கடைசியாக நைஜாம் நிராகரித்து விட்டதால், இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் இனி மேற்கொண்டு எவ்வித சமரசப் பேச்சுக்கும் இடமில்லை என்பதை ஜவாஹர்லால்ஜி தெளிவாக்கியிருக்கிறார்.

சமரசப் பேச்சு வார்த்தைகள் சம்பந்தமான கதை முடிந்து விட்டதெனினும், நைஜாமுக்கு இந்தியாவின் முடிசூடா மன்னர் கடைசி கடைசியாக ஒரு சந்தர்ப்பமும் அளித்திருக்கிறார்.

அதாவது மேற்படி நகல் ஒப்பந்தத்தில் நைஜாம் எச்சமயத்திலும் கையெழுத்திடலாம் என்பதுதான் அந்தச் சந்தர்ப்பமாகும். காலம் கடந்து நைஜாமினால் நிலைமையைச் சமாளிக்க முடியாமற் போகுமுன் அவர் அதில் கையெழுத்திடுவார் என்றோ, அல்லது அவர் கையெழுத்திட அவரைச் சூழ்ந்துள்ள சகுனிகள் இடம் கொடுப்பார்கள் என்றோ தோன்றவில்லை.

எனினும் இச் சந்தர்ப்பத்தில் நம்பிக்கையளிக்கக் கூடிய ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

இந்திய சர்க்காரை நாக்கில் நரம்பின்றித் தூற்றுவதையே தமது தொழிலாகக் கொண்டு, துவேஷக் கனலைக் கக்கும் காஸிம் ரஸ்வி கூட ராஜாஜி இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவியை ஏற்றுக்கொண்டிருப்பதைக் குறித்துத் தமது சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்!

சையது காஸிம் ரஸ்வி கூறுவதாவது:

“ராஜாஜி நீதி வழுவாதவர், தர்ம நெறி தவறாதவர். அவர் ஒரு தீர்க்கதரிசி. நியாயத்தை நிலைநிறுத்துவதற்காக அவர் எல்லோரையும் எதிர்த்துத் தனித்து நின்று போராடவும் தயங்கமாட்டார். எனவே இந்தியா-ஹைதராபாத் பிரச்னையை ராஜாஜி திருப்திகரமாகத் தீர்த்து வைப்பார் என்று நம்புகிறேன். அவரிடத்தில் இரு சமூகத்தினருக்கும் பூரண நம்பிக்கையுண்டு. இந்த தேசத்திலேயே ராஜதந்திரத்திலும், அரசியல் மேதையிலும், நிர்வாக அனுபவத்திலும் ராஜாஜிதான் முதன்மையானவர்” என்று காஸிம் ரஸ்வி குறிப்பிட்டிருக்கிறார்.

எனவே, ரஸ்வியும் ஒப்புக்கொள்ளக் கூடிய, நீதி வழுவாத, தர்ம நெறி தவறாத, தீர்க்கதரிசியான ராஜாஜியின் புத்திமதியையாவது நைஜாம் கேட்டுத் தம்மையும் ரஸ்வி கோஷ்டியினரையும் காப்பாற்றிக் கொள்வாரா?

# புண்ணியம் மிஞ்சியது!



(1) ராஜாஜி என்றுரோ சொல்லக்கேட்டதும்—ராம
ராச்சியமே கண்ணெதிரில் வந்து நிற்குது!
பூசையேதும் செய்ததில்லை புகழை கொள்ள நாம்—ஏதோ
புண்ணியமே மிஞ்சிநின்று போற்றிக்காக்குது!

(2) கருப்புக் கண்ணாடிக்குள்ளே கண்ணிருக்குது—நாட்டை
கவனமாய்ப் பார்க்க அதில் பண்பிருக்குது!
பொறுப்பை உணர்ந்துசெய்யும் போக்கிருக்குது—அதில்
புலமையும் புத்தியும் பொதிந்திருக்குது!

(3) கூரான மூக்கிலொரு குணமிருக்குது—எதிர்
கொண்டவரை நின்றறியும் திறனிருக்குது!
வேறாகப் போனவரை வேண்டியழைத்து—அவர்
விதியையே மாற்றிவிடும் மதியிருக்குது!

(4) அலுங்காத சிரிப்பிலொரு அன்புதோணுது—அதில்
அடங்கித் தெளிந்தமகா மேதை காணுது;
குலுங்காத சிரிப்பில்பெரும் குணம் தோணுது—அது
குறையற்ற மனக்கட்டின் கோடி காட்டுது!

(5) உவமையான பேச்சிலொரு உறுதிநிற்குது—வீண்
உணர்ச்சிகளை அடக்கிநம்மை உணரச்செய்யுது!
அவையடக்க முன்னபேச்சில் அழுத்தம் மேவுது—அவர்
அறிந்த உண்மை செயலில்வந்து ஆட்சிகொள்ளுது!

(6) அதிராத நடையில்மிக்க அடக்கம் தோணுது—அவர்
ஆர்ந்தபெரும் புத்திசிறு உருவில் தோணுது;
மினுக்காத கதர்உடையில் மேன்மை காணுது—அவர்
மேதையிந்த உலகமெல்லாம் மேவி நிக்குது!

(7) ஜாதிச்சண்டை சமயச்சண்டை ஓயப்போகுது—யாரும்
சமதையுடன் வாழுவகை காணப்போகுது;
ஆதியிலே ராமராண்ட பூமியிதிலே—இப்போ
ஆளவந்த ராஜாஜிக்கு ஈடு யாரையா?

—காட்டூர் கண்ணன்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்



ரா.கி.

## 34. கர்ஸான் தர்பார்

காங்கிரஸ் முடிந்துவிட்டது. ஆயினும் கல்கத்தாவில் இன்னும் பல பிரமுகர்களைப் பார்த்துப் பேசித் தென்னாப்பிரிக்கா இந்தியர் விஷயத்தில் சிரத்தை உண்டாக்க வேண்டும் என்று காந்திஜி நினைத்தார். இதற்காகக் கல்கத்தாவில் ஒரு மாதம் தங்குவதென்று உத்தேசித்தார். இந்த விவரம் ஸ்ரீ கோகலேக்குத் தெரிந்ததும் காந்திஜி தம்முடைய ஜாகைக்கு வந்து தம்முடன் தங்கியிருக்க வேண்டும் என்று வற்புறுத்தி அழைத்தார்.

அப்போது இந்தியா தேசத்துக்குக் கல்கத்தா தலைநகராயிருந்தது. வைஸ்ராய் சர்வாதிகாரம் படைத்தவராயிருந்தபோதிலும் இந்தியச் சட்டசபை ஒன்றும் இருந்தது. அதில் ஸ்ரீ கோகலே அங்கத்தினர். ஆதலால் இந்தியச் சட்டசபை நடக்கும் சமயங்களில் ஸ்ரீ கோகலே கல்கத்தாவில் ஜாகை வைத்துக்கொண்டு வசித்தார்.

சங்கோசத்தினால் இரண்டு தினம் வரையில் காந்திஜி கோகலே வீட்டுக்குப் போகவில்லை. எனவே கோகலேயே ஒருநாள் வந்தார். "நீர் இந்த நாட்டினர்; இந்த நாட்டிலே இருந்து பல தொண்டுகள் செய்ய வேண்டியவர். ஆனால் இப்படிச் சங்கோசப்பட்டால் ஒரு காரியமும் நடைபெறாது. எல்லாருடனும் கலந்து பழகக் கற்றுக்கொள்ள வேண்டும்" என்று சொன்னார். அதன் பேரில் கோகலேயின் ஜாகைக்குக் காந்திஜி சென்றினார்.

புறப்படுவதற்கு முன்னால் காந்திஜி தங்கியிருந்த 'இந்தியா கிளப்'பில் ஒரு விசித்திரமான சம்பவம் நடைபெற்றது.

அச்சமயம் ஏழாம் எட்வர்டு சக்கரவர்த்தி முடி சூட்டப்பட்டார். அரசரின் பிரதிநிதியான லார்டு கர்ஸான் மேற்படி வைபவத்தை முன்னிட்டு ஒரு தர்பார் நடத்தினார். இந்தியா கிளப்பில் தங்கியிருந்த ராஜாக்களும் மகாராஜாக்களும் மேற்படி தர்பாருக்குப் போனார்கள். போகும்போது அவர்கள் வங்காளிகள் வழக்கமாக அணியும் வேஷ்டி, சட்டை, அங்கவஸ்திரம் இவற்றுக்குப் பதிலாக, ஆங்கிலேயர் வீட்டில் பணி செய்யும் ஏவலாளரின் உடை போன்ற நீண்ட அங்கி, இடுப்புப் பட்டை, வர்ணத் தலைப்பாகை ஆகியவற்றை அணிந்து சென்றார்கள். காந்திஜி இதைக் கவனித்தார். "அழகிய வேஷ்டி அங்கவஸ்திரத்தை விட்டு, இந்தக் குற்றேவல் உடையை ஏன் அணிகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு ஒரு ராஜா சொன்ன பதிலாவது:—"எங்களுக்கும் குற்றேவலாளிக்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை. நாங்கள் கர்ஸான் பிரபுவின் குற்றேவலாளர்தான். தர்பாருக்குப் போகாமற் போனால் எங்களுடைய ராஜ்யமே போய்விடும். போனால் இந்த உடை தரித்துத்தான் போக வேண்டும். போகத்தான் போகிறோமே? வைஸ்ராயிடம் ஒரு வார்த்தை பேச முடியும் என்று நினைக்கிறீர்களா? அதுதான் இல்லையாமே!"

இவ்வாறு மனம் விட்டுப் பேசியவரிடம் காந்திஜிக்கு அநுதாபம் உண்டாயிற்று.

பல வருஷங்களுக்குப் பிறகு இதே மாதிரி சுதேச ராஜாக்களின் ஆடை ஆபரணங்கள் சம்பந்தமாக மகாத்மா காந்தி தம்முடைய மனவேதனையை வெளியிட வேண்டி நேர்ந்தது. லார்ட் ஹார்டிஞ்ச் இந்தியாவின்

வைஸராயாக இருந்த காலத்தில் காசியில் ஹிந்து சர்வகலாசாலையின் அஸ்திவார விழா நடைபெற்றது. அப்போதும் வைஸராய் ஹார்டிஞ்ச் ஒரு தர்பார் நடத்தினார். ராஜாக்களும் மகா ராஜாக்களும் ஸ்திரீகளைப்போல் ஆடை ஆபரண அலங்காரங்களுடன் வந்திருந்தார்கள். பட்டாடைகள் தரித்துக் கொண்டு கழுத்தில் முத்து மாலைகளும் கையில் காப்புக் கொலுசுகளும் வாகுவலயங்களும் அணிந்திருந்தார்கள். அவர்களுடைய சிங்காரத் தலைப்பாகைகளில் முத்துக்களும் வைரங்களும் பதித்திருந்தன. இவைகளோடு அரைக் கச்சைகளில் பட்டாக் கத்திகளும் தரித்திருந்தார்கள். அந்தப் பட்டாக் கத்திகளின் கைப் பிடிகளில் இரத்தினங்களும் வைரங்களும் ஜொலித்தன. இதை யெல்லாம் பார்த்துக் காந்தி மகானுக்குச் சகிக்கவே யில்லை. விசாரித்ததில் ராஜாக்களில் பலர் அத்தகைய ஆடை அணிகளை மனப் பூர்வமாக வெறுக்கிறார்கள் என்றும் வைஸராயின் தர்பாருக்கு அத்தகைய அணி பணிகளுடனே அவர்கள் வரவேண்டுமென்பது கட்டாயம் என்றும் தெரிய வந்தது.

மேற்படி விழா சம்பந்தமாக நடந்த ஒரு கூட்டத்தில் காந்திஜியைப் பேசும்படி கேட்டுக் கொண்டபோது இதைப் பற்றியே பேசி விட்டார். "நம்முடைய ராஜாக்களும் மகாராஜாக்களும் எதற்காக இப்படிக் கொலுப் பொம்மைகளைப் போல் அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்கள்? இவர்களுக்குத் தன் மதிப்பு உணர்ச்சி வேண்டாமா? பிரிட்டிஷ் இராஜப் பிரதிநிதியைக் கண்டு எதற்காக இவர்கள் இவ்வளவு பயந்து நடுங்க வேண்டும்? பரம்பரையான இவர்களுடைய தைரியமும் வீரமும் எங்கே?" என்று இவ்விதம் பேசினார்.

கூட்டத்தி லிருந்தவர்களில் டாக்டர் பெஸண்டு அம்மையும் ஒருவர். காந்திஜி இவ்விதம் தம் மனதிலிருந்ததை ஒளியாமல் வெளியிட்டது டாக்டர் பெஸண்டு அம்மைக்குக் கோபத்தை உண்டாக்கியது. காந்திஜி மரியாதைக் குறைவாகப் பேசியதைக் கண்டிப்பதற்கு அறிகுறியாக டாக்டர் பெஸண்டு அம்மை எழுந்து வெளியே சென்றார். இன்னும் சிலரும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள். இதைப் பற்றிப் பெஸண்டு அம்மையார் பத்திரிகைகளுக்கு ஓர் அறிக்கையும் விட்டார். ஆனால் காந்திஜி கூறியது சரிதான் என்று தேச மக்களில் பெரும்பாலோர் ஆமோதித்தார்கள். சுதேச மன்னர்களிலேயே பலர் அதைப் பற்றி மனதிற்குள்ளே மகிழ்ச்சி யடைந்தார்கள். இந்த சம்பவத்தினால் காந்திஜியிடம் சுதேச மன்னர்களுடைய மதிப்பு வளர்ந்தது.

## 35. கோகலேயின் விருந்தாளி

ஸ்ரீ கோகலேயின் வீட்டுக்குக் காந்தி மகான் போன முதல் தினமே தம் சொந்த வீட்டில் இருப்பதாக அவர் எண்ணும்படி யிருந்தது. கோகலே அவருடைய சௌகரியத்துக்காக அத்தனைய ஏற்பாடுகளைச் செய்திருந்தார். காந்திஜிக்கு அவ்வளவு அதிகமான சௌகரியங்களும் வேண்டியதில்லை யல்லவா? அவருடைய காரியங்களை அவரே செய்து கொள்ளும்படி விட்டு விட்டால் அதுவே அவருக்குப் பெரிய சௌகரியம். குற்றேவல் புரிவதற்கு ஆட்கள் அவருக்குத் தேவையில்லை. இதெல்லாம் கோகலேயின் மனதைப் பெரிதும் கவர்ந்தது. அடிக்கடி காந்திஜியின் எளிமையான வழக்க பழக்கங்களைப் பாராட்டி அவர் பேசி வந்தார்.

கோகலே தம்மைப் பார்க்க வந்த பிரமுகர்களை யெல்லாம் காந்திஜிக்கும் அறிமுகப் படுத்தினார். அவர்களுள் ஒருவர் ஆசிரியர் பி. ஸி. ராய். உயர்ந்த அறிவுக்கும் எளிய வாழ்வுக்கும் சிறந்த தேசபக்திக்கும் ஆசிரியர் பி. ஸி. ராய் பிரசித்தி பெற்றவர். இரசாயன சாஸ்திர ஆராய்ச்சியில் உலகப் புகழ் அடைந்தவர். தம்முடைய இரசாயன சாஸ்திர அறிவை நாட்டின் நன்மைக்குப் பயன்படுத்த விரும்பி வங்காளத்தில் மிகப் பெரிய மருந்து உற்பத்திச் சாலையை அவர் ஏற்படுத்தி யிருந்தார்.

ஆசிரியர் பி. ஸி. ராயை ஸ்ரீ கோகலே பின்வருமாறு காந்திஜிக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் :—"இவர்தான் ஆசிரியர் ராய். மாதம் ரூ. 800 இவருக்குச் சர்வகலா சாலையில் சம்பளம் கொடுக்கிறார்கள். ஆனால் தமக்காக ரூ. 40 மட்டும் வைத்துக் கொண்டு பாக்கியைப் பொது நன்மைக் காகச் செலவிடுகிறார். இன்று வரை இவர் பிரம்மசாரி; கலியாணம் செய்து கொள்ளும் எண்ணமும் இவருக்குக் கிடையாது."

ஸ்ரீ கோகலேக்கும் ஆசிரியர் ராய்க்கும் நடந்த சம்பாஷணைகளைக் கேட்டுக் கொண்டிருப்பது காந்திஜிக்கு மிகவும் பிரியமாயிருந்தது. பொது நன்மைக்குரிய விஷயங்களைப் பற்றியே அவர்கள் பேசுவார்கள். ஆகையால் எவ்வளவு நேரம் கேட்டுக் கொண்டிருந்தாலும் அலுப்பு உண்டாகாது. இன்னும் பேசமாட்டார்களா என்று இருக்கும்.



ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலே

பிற்காலத்தில் ஆசிரியர் பி. ஸி. ராய் காந்திஜியின் சிறந்த நண்பர்களில் ஒருவரானார். கதர் இயக்கம் முதலிய நிர்மாண திட்ட வேலைகளுக்கு வங்காளத்தில் பெருதவி புரிந்தார்.

கோகலேயின் பக்கத்தில் இருந்து அவர் வாழ்க்கை நடத்திய முறையையும் பொதுவேலை செய்த முறையையும் கவனிப்பதில் காந்திஜிக்குப் பெரு மகிழ்ச்சி உண்டாயிற்று. ஒரு நிமிஷமேனும் கோகலே தம் காலத்தை வீணாக்குவதில்லை. யாருடன் பேசினாலும் பழகினாலும் நட்புக் கொண்டாலும் அதிலெல்லாம் பொது நல நோக்கமே குடி கொண்டிருக்கும். பொய்யும் கபடமும் அவருடைய பேச்சில் அணுவளவும் காண முடியாது. பலர் வந்து பற்பல காரியங்களில் அவரைச் சிரத்தை கொள்ளும்படி செய்ய முயல்வார்கள். ஆனால் கோகலே அதற்கெல்லாம் ஒரே பதில்தான் சொல்வாராம். "தங்களுக்குச் சிரத்தையுள்ள காரியத்தைத் தாங்கள் செய்யுங்கள்; தேச விடுதலைதான் எனக்கு முக்கியம். அதற்காகவே என்னுடைய முழு கவனத்தையும் நேரத்தையும் செலவிட வேண்டும். தேசம் விடுதலை பெற்றுவிட்டால் அப்புறம் மற்றக் காரியங்களில் சிரத்தை எடுத்துக் கொள்வேன்" என்பாராம்.

கோகலேக்குத் தம்முடைய குரு ரானடேயிடம் அளவில்லாத பக்தி. எந்த விஷயமானாலும் அதைப்பற்றி ரானடே ஏதாவது அபிப்பிராயம் தெரிவித்திருந்தால் அதுவே கோகலேக்கு முடிவானது. வேறு யோசனையே செய்ய மாட்டார். ரானடேயின் குணாதிசயங்களைப் பற்றி ஓயாமல் பேசிக்கொண்டேயிருப்பார். ரானடே ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தபோதிலும் காங்கிரஸ் மகாசபைகளுக்குப் போவதுண்டாம். "அந்த மாதிரி தைரியம் வேறு யாருக்கு வரும்?" என்று அடிக்கடி கோகலே சொல்லுவது வழக்கம்.

சட்டசபைக்கும் மற்ற ஜோலிகளுக்கும் போவதற்குக் கோகலே கோச் வண்டி ஒன்று வைத்திருந்தார். காந்திஜி ஒருநாள் "குதிரை வண்டி எதற்காக வைத்திருக்கிறீர்கள்? டிராம் வண்டியில் போனால் என்ன? அதனால் தங்களுடைய கௌரவம் குறைந்து போய்விடுமா?" என்று பட்டவர்த்தனமாகக் கேட்டுவிட்டார்.

கோகலே தேசத் தொண்டுக்காகவே தம் வாழ்நாளை அர்ப்பணம் செய்தவர்; எளிய வாழ்க்கையை மேற்கொண்டவர். ஆகையினால்தான் காந்திஜி அவரை அவ்விதம் துணிந்து கேட்டார்.

கோகலே அதற்குக் கூறிய மறுமொழி வருமாறு:—"நீங்கள் விருப்பம்போல் டிராம் வண்டியில் போகக் கூடியதாயிருக்கிறது. இது குறித்து நான் பொறாமைப் படுகிறேன். அந்தச் சௌகரியம் எனக்குக் கிடையாது. ஜனங்கள் என்னை நன்கறிந்திருப்பதால் டிராம் வண்டியில் போவது காரியத்துக்குக் குந்தகமாயிருக்கும். என்னைப்போல் பொது ஜனங்களால் நன்கு அறியப்படும் துர்ப்பாக்கியம் உங்களுக்கும் ஒரு காலத்தில் வரக்கூடும். அப்போது டிராம் வண்டிப் பிரயாணம் உங்களுக்கும் கஷ்டமாய்த்தானிருக்கும்."

கோகலேயின் வாக்கு எவ்வளவு ஆச்சரியமாய்ப் பலித்துவிட்டது? காந்திஜியைப் போல் கோடிக் கணக்கான ஜனங்களால் நன்கு அறியப்பட்டவர் சரித்திரத்திலேயே வேறு யாரும் இல்லையல்லவா?

மேற்படி பதில் காந்திஜிக்கு ஒருவாறு திருப்தியளித்தது. ஆனால் இன்னொரு விஷயத்தில் கோகலேயின் சமாதானம் அவருக்குத் திருப்தி தரவில்லை.

“ தாங்கள் தேகாப்பியாசமே செய்வதில்லை. உலாவப் போவதுகூட இல்லை. ஓயாமல் தங்களை வியாதி பிடுங்கித் தின்பதில் ஆச்சரியம் என்ன? பொது ஊழியம் செய்தால் தேகாப்பியாசத்துக்குக் கூடச் சாவகாசம் இல்லாமல் போய் விடுமா?” என்று காந்திஜி கேட்டதற்குக் கோகலே, “நீங்கள்தான் பார்க்கிறீர்களே? உலாவப் போவதற்கு எனக்கு நேரம் எங்கே இருக்கிறது?” என்று பதில் அளித்தார்.

இந்தச் சமாதானத்தைக் காந்திஜி ஒப்புக் கொள்ளவில்லை யானாலும் கோகலேயிடம் வைத்திருந்த பெருமதிப்புக் காரணமாகச் சும்மா இருந்தார்.

நம்முடைய தேசியத் தலைவர்களில் பெரும்பாலோர் கோகலேயிடம் இருந்த குறைக்கு ஆளாகியிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் ஆரோக்கியத்தைச் சரியாகக் கவனித்துக் கொள்வதில்லை. தேகாப்பியாசமும் செய்வதில்லை. இதனால் எத்தனையோ அரும் பெரும் தலைவர்களின் சேவையைத் தேசம் சீக்கிரத்தில் இழந்துவிட்டது.

காந்திஜி மட்டும் இறுதிவரையில் தேகாரோக்கியத்தைக் காப்பாற்றி வந்தார். என்ன வேலையிருந்தாலும் தினம் கொஞ்ச நேரம் விரைவாக நடக்கும் வழக்கத்தைக் கைக் கொண்டிருந்தார். இதனால் அவருடைய வேலை செய்யும் திறமை குறைந்துவிடவில்லை; அதிகமாக வளர்ந்தது.

இவ்விதமாகக் கோகலேயுடன் ஒரு மாதம் கழித்த பிறகு காந்திஜி இந்தியா முழுவதிலும் ஒரு முறை மூன்றாம் வகுப்பு ரயில் வண்டியில் பிரயாணம் செய்வதென்று உத்தேசித்தார். மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளின் கஷ்டங்களை நன்கு அறிந்து பரிகாரம் தேடவேண்டும் என்பதுதான் அவருடைய நோக்கம். கோகலே முதலில் தடை செய்து பிறகு சம்மதம் கொடுத்தார். பன்னிரண்டு அணா பெறுமான கித்தான் பை ஒன்றைக் காந்திஜி வாங்கிக் கொண்டார். அதில் ஒரு முரட்டுக் கம்பளிச் சட்டை, ஒரு வேஷ்டி, ஒரு துண்டு, ஒரு பனியன் இவற்றை வைத்துக் கொண்டார். இந்தப் பையைத் தவிர ஒரு தப்பட்டி, ஒரு தண்ணீர்க் கூஜா (மண்ணால் ஆனது) இவ்வளவுதான் காந்திஜி மூன்றாம் வகுப்புப் பிரயாணத்துக்காக எடுத்துக் கொண்டவை. கோகலே பிரயாணத்துக்காகப் பூரிகளும் லட்டுகளும் தயாரித்து ஒரு சிற்றுண்டிப் பாத்திரத்தில் வைத்துக் கொடுத்தார்.

மகாத்மாவை ரயில் ஏற்றி அனுப்ப ஸ்ரீ கோகலேயும் ஆசிரியர் ராயும் புறப்பட்டார்கள். “நீங்கள் எதற்காகச் சிரமப்பட வேண்டும்? ஸ்டேஷனுக்கு வருவது அவசியம் இல்லை!” என்று காந்திஜி கூறியதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. “நீங்கள் முதல் வகுப்பில் பிரயாணம் செய்தால் நான் வரவேண்டிய அவசியமில்லை. மூன்றாம் வகுப்பில் ஏறுவதால் கட்டாயம் நான் ஸ்டேஷனுக்கு வந்தாக வேண்டும்” என்றார் கோகலே.

எனவே இருவரும் ஸ்டேஷனுக்குப் போகவே செய்தார்கள். அவர்களுடைய வாழ்த்துக்களைப் பெற்றுக் கொண்டு காந்திஜி பிரயாணம் செய்யத் தொடங்கினார்.

இந்தச் சம்பவங்களிலிருந்து, காந்திஜியின் மேன்மையை ஒருவாறு முன் கூட்டியே அறிந்து பாராட்டிய இந்தியத் தலைவர் ஸ்ரீ கோகலே என்பதாக அறிகிறோம். அதோடு கோகலே எத்தகைய மரியாதைக் காரர் என்பதையும் அவருடைய பண்பாட்டின் உயர்வையும் அறிகிறோம். காந்திஜி எழுதியுள்ள சுய சரிதத்திலிருந்துதான் கோகலேயைப் பற்றி மேற்கண்ட விவரங்கள் நமக்குத் தெரிய வருகின்றன.



# இளமையின் உயர்வு

டாம்கோ கூந்தல் தேங்கா யெண்ணெயையும் ஷாம்பூவையும் வழக்கமாக உபயோகிப்பதன் பயனால் அவளுக்குக் கிடைத்த பளபளப்பும், ஆரோக்கியமும் வாய்ந்த கூந்தலில் மூன்று அல்லது இரண்டு புஷ்பங்களை வைத்தாலே அவளது இளமையின் புதுமை உயர்வாகத்தான் தோன்றுகிறது

டாம்கோ "கூந்தல்" தேங்கா
யெண்ணெயும் ஷாம்பூவும்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிட்.



# அலை ஓசை

கல்கி

இருபத்தாறாம் அத்தியாயம்

## மலர் பொழிந்தது!

அன்று இரவு மாப்பிள்ளை சம்பந்தி வகையறாவுக்காகச் சாப்பாடு கொண்டு வைத்துவிட்டு வந்த பரிசாரகன் சங்கரனைப் பார்த்துச் சரஸ்வதி அம்மாள், "ஏண்டா, சங்கரா! அவர்கள் என்னடா பேசிக் கொண்டிருக்கிறார்கள்? ஏதாவது காதில் விழுந்ததா?" என்று கேட்டாள்.

"காதில் ஒன்றும் விழவில்லை, அம்மா! விழுந்த வரையில் அவ்வளவு சுவாரஸ்யமாக இல்லை!" என்றான் சங்கரன்.

"என்னடா உளறுகிறாய்? காதில் ஒன்றும் விழவில்லை, ஆனால் சுவாரஸ்யமாயில்லை என்றால்?"

"ஏதோ சிலவார்த்தை அரை குறையாகக் காதில் விழுந்தது. பணங் காசைப் பற்றித் தான் பேச்சு. பதினாயிரமாம்! பதினையாயிரமாம்! இவ்வளவு படித்தவர்கள்—பெரிய மனிதர்களே இப்படி இருந்தால்......"

"அதனால் என்னடா மோசம்? பிள்ளையைப் பெற்றவர்கள் அப்படித் தான் பேசுவார்கள். நாளைக்கு நம் வீட்டுப் பிள்ளைகளுக்குக் கல்யாணம் என்றால் நாம் மட்டும் பணங் காசு இல்லாமல் பண்ணிக் கொண்டு விடுவோமா? அதிலேயும் அந்தப் பிராமணர் கொஞ்சம் கடிசல் என்று கேள்வி. அப்படியெல்லாம் வாய் கூசாமல் ரொம்பக் கேட்கக்கூடாது என்று பிள்ளைக்குத் தாயார் ஒரு வேளை சொல்லிக் கொண்டிருப்பாள். என்னைக் கேட்டால் பேசவேண்டியதை யெல்லாம் இப்போதே பேசிக் கரார் செய்துகொண்டு விடுவது நல்லது என்பேன். அப்புறம் புகாருக்கு இடம் இருக்கக்கூடாது, பார்!"

இவ்விதம் சரஸ்வதி அம்மாள் வாய் ஓயாமல் பேசினாள். எனினும் அவளுடைய மனதில் இருந்த பரபரப்பு அடங்கவில்லை. சீதாவைக் கூப்பிட்டு, "குழந்தை! அவர்கள் இறங்கியிருக்கிற வீட்டுக்குப் போய் 'வேண்டியதெல்லாம் வந்துவிட்டதா? இன்னும் ஏதாவது வேண்டுமா?' என்று சம்பந்தியம்மாளை விசாரித்து விட்டு வருகிறாயா? அதோடு சீமாச்சு மாமாவை இங்கே உடனே வரச் சொல்லு!" என்றாள்.

சீதா அவர்கள் இறங்கியிருந்த வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்ற போது வழியில் சீமாச்சு வய்யர் வந்து கொண்டிருந்தார். ஆயினும் அவள் திரும்பாமல் மேலே சென்றாள். வீட்டின் முன் புறத்து ஹாலில் சௌந்தர ராகவன் சாய்மான நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான். சீதாவைப் பார்த்ததும் அவன் நிமிர்ந்து உட்கார்ந்து, "நீ மட்டும் வந்தாயா? உன் தோழியையும் அழைத்துக் கொண்டு வந்தாயா?" என்று கேட்டான். சீதா சிறிது தயங்கி விட்டுப் பிறகு "நான் மட்டுந்தான் வந்தேன்! நீங்கள் தான் லலிதாவைக் காபராப் படுத்தி விட்டீர்களே?" என்று சொன்னாள்.

"அவள் இன்னும் அழுது கொண்டிருக்கிறாளா? அல்லது அழுகையை நிறுத்தியாச்சா?" என்று சௌந்தர ராகவன் கேட்டான்.

"அழவும் இல்லை, ஒன்றுமில்லை. எதற்காக அழவேண்டும்?"

"அவளைப் பாடச் சொன்னதற்குப் பாடத்தான் இல்லையே? ஒரு வேளை அழ ஆரம்பித்து விட்டாளோ என்று பார்த்தேன். போகட்டும்; நீயாவது இந்த மட்டும் வாயைத் திறந்து பேசுகிறாயே? சந்தோஷம். அவளைப்போல் நீயும் பேசா மடந்தையா யிருந்தால் ஆபத்துத்தான்" என்றான்.

"என்னையும் யாராவது பெண் பார்ப்பதற் கென்று வந்திருந்தால் நானும் பேசா மடந்தையாகத் தான் இருப்பேன்!" என்று சொல்லி விட்டு இதற்கு மேல் அங்கே நிற்கக் கூடாது என்று எண்ணிச் சீதா உள்ளே சென்றாள். அவளுடைய நெஞ்சு எக் காரணத்தினாலோ பட படவென்று அடித்துக் கொண்டது.

காமாட்சி அம்மாளும் சாஸ்திரிகளும் கூடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தவர்கள், சீதாவைப் பார்த்ததும் பேச்சை நிறுத்தினார்கள்.

"குழந்தை! எங்கேயம்மா வந்தாய்?" என்று காமாட்சி கேட்டாள்.

"சாப்பாடு எல்லாம் சரியாய் வந்ததா என்று மாமி பார்த்து விட்டு வரச் சொன்னான்!" என்றாள் சீதா.

"எல்லாம் சரியாய் வந்து சேர்ந்தது என்று சொல்லு. அவ்வளவு தானே?"

"அவ்வளவு தான், மாமி! லலிதா வைப்பற்றி ஒரு வார்த்தை நானே சொல்ல வேண்டும் என்று வந்தேன். இன்றைக்கு ஏதோ அவள் பேசாமல் நின்றாளே என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். எங்க லலிதாவைப் போல் இந்தப் பூலோகத்திலேயே சமர்த்துக் கிடையாது. கலகல வென்று பேசிக் கொண்டிருப்பாள். பாட்டு என்னை விட எவ்வளவோ நன்றாய்ப் பாடுவாள். குரல், குயிலின் குரல்தான்! இன்றைக்கு என்னமோ கலியாணத் துக்குப் பார்ப்பதற்கு என்று புது மனுஷர்கள் வந்ததும் கொஞ்சம் பயந்து போய் விட்டாள். அதைப் பற்றி நீங்கள் ஒன்றும் நினைத்துக் கொள்ளக் கூடாது!"

"இந்தப் பெண் வெகு பொல்லாத பெண்ணா யிருக்கிறாளே!" என்றார் பத்மலோசன சாஸ்திரிகள்.

"அதனால்தான் உங்களுக்குச் சந்தேகம் வந்துவிட்டது போலிருக்கிறது:—இவள்தான் ஒரு வேளை கலியாணப் பெண்ணோ என்று!"

"அதனால் என்ன? இவளுக்கும் ஒருநாள் கலியாணம் நடக்க வேண்டியதுதானே? ஏனம்மா, உன் தகப்பனாருக்குப் பம்பாயில் என்ன உத்தியோகம்?" என்று சாஸ்திரிகள் கேட்டார்.

"எங்க அப்பாவுக்கு ரயில்வேயில் உத்தியோகம், மாமா!"

"சம்பளம் என்னவோ?"

"சம்பளம் மாதம் முந்நூறு ரூபாய். ஆனால் எவ்வளவு சம்பளமாயிருந்தால் என்ன? எல்லாம் செலவுக்குத்தான் சரியா யிருக்கிறது. என்னைப் பார்த்தாலே தெரிந்து விடுமே?"

"லலிதாவைப் போல் நகை நட்டுப் போட்டுக் கொள்ளவில்லை யென்று அவ்விதம் சொல்கிறாயா? ஸ்ரீ ராமச் சந்திர மூர்த்தியின் அருள் இருந்தால் நீயும் ஒரு நாளைக்கு வேண்டிய நகை நட்டுக்கள் பூட்டிக் கொள்வாய்!" என்றாள் காமாட்சி அம்மாள்.

"இராமச் சந்திர மூர்த்தியின் அருள் நகை நட்டுக்குத்தானா வேண்டும்?" என்றார் சாஸ்திரிகள்.

"நகை நட்டுக்குந்தான் வேண்டும்; மற்ற எல்லாவற்றுக்குந் தான் வேண்டும். அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' இருக்கட்டும், சீதா! உன் கலியாணத்தைப் பற்றி உன் அப்பா ஒன்றும் ஏற்பாடு செய்யவில்லையா! வரன், கிரன் பார்க்கவில்லையா?"

"மாமி! எங்க அப்பா 'எர்லி மாரியேஜ்' கூடாது என்கிற கட்சியைச் சேர்ந்தவர். நானும் எங்க அப்பா கட்சி தான். ஆனால் அம்மா மட்டும் ஓயாமல் வரன் வரன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். உங்களிடத்தில் கூட நாளைக்கு ஏதாவது சொன்னாலும் சொல்லுவாள். நீங்கள் கவனிக்க வேண்டாம்."

"ஏன், அம்மா, அப்படிச் சொல்லுகிறாய்? காலா காலத்தில் உனக்கும் கலியாணம் நடக்க வேண்டியது தானே?" என்றாள் காமாட்சி.





"நடக்க வேண்டியதுதான். ஆனால் ஐயாயிரத்தைக் கொண்டுவா, பத்தாயிரத்தைக் கொண்டுவா என்று கேட்கிறார்களே, அதற்கு எங்க அப்பா எங்கே போவார்? அதனால் தான் நான் கலியாணமே பண்ணிக் கொள்வதில்லை என்று வைத்திருக்கிறேன்."

"பெண்ணாகட்டும்; பிள்ளையாகட்டும். இப்படியல்லவா பெற்றவர்கள் விஷயத்தில் பயபக்தியோடு இருக்க வேண்டும்?" என்றார் சாஸ்திரிகள்.

"லலிதா மட்டும் என்ன? அப்பா அம்மா கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டாள், மாமா! நாளைக்கு உங்கள் பிள்ளைக்கு வாழ்க்கைப் பட்டுவிட்டால் உங்களிடத்திலும் அப்படியே நடந்து கொள்வாள். நீங்கள் புறப்பட்டு வந்த பிறகு நான் அவளிடம் என்ன சொன்னேன், தெரியுமா? 'லலிதா! கலியாணம் ஆனபிற்பாடு மாமனாரும் மாமியாரும்தான் அப்பா அம்மா என்று நினைத்துக் கொள். சொந்தத் தாய் தகப்பனார்கூட அப்புறந்தான்!' என்று சொன்னேன். லலிதாவும் 'அதற்கு என்னடி சந்தேகம்?' என்றாள். கேட்டீர்களா, மாமி! இந்தக் காலத்து மாட்டுப் பெண்களைப் போல் மட்டு மரியாதையில்லாமல் தாட், பூட் என்று லலிதா நடந்து கொள்ள மாட்டாள். நான் ஏதோ சிறு பெண் சொல்கிறேனே என்று வித்தியாசமாய் நினைத்துக் கொள்ளாதீர்கள். எங்கள் லலிகாவைக் கலியாணம் செய்து கொள்ள உங்கள் பிள்ளை கொடுத்து வைத்திருக்க வேண்டும். உங்கள் பிள்ளையைக் கல்யாணம்

செய்துகொள்ள லலிதாவும் கொடுத்து வைத்தவள் தான்! சந்தேக மில்லை."

"இந்தப் பெண் அபார சமர்த்தா யிருக்கிறாளே!" என்றார் சாஸ்திரிகள்.

இதைக் கேட்டுச் சீதாவின் உள்ளம் குதூகலம் அடைந்தது. எனினும் அதற்குமேல் அங்கு இருப்பது நியாய மில்லை என்று உணர்ந்தாள். "மாமி! நான் போய் வருகிறேன். ஏதாவது தப்பாய்ச் சொல்லி யிருந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டாள்.

போகும் போது வழியில் முன் இருந்த இடத்திலேயே இருந்த ராகவன், "நீ அம்மாவிடம் சொல்லிக் கொண் டிருந்ததை யெல்லாம் கேட்டேன். பத்தாயிரம் ரூபாய் கொடுத்து வக்கீல் வைத்திருந்தால் கூட நீ உன் தோழியின் கட்சியைப் பேசியது போல் யாரும் பேசி யிருக்க மாட்டார்கள்! உன்னைச் சிநேகிதியாகப் பெறுவதற்கு உன் தோழியும் ரொம்பக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்!" என்றான்.

"தாங்க்ஸ்" என்றாள் சீதா.

"எனக்கு எதற்குத் தாங்க்ஸ்? நான் அல்லவா உனக்குத் தாங்க்ஸ் சொல்ல வேண்டும்?"

"நீங்கள் இப்போது தாங்க்ஸ் கொடுத்தால் நான் வாங்கிக் கொள்ள மாட்டேன். நாளைக்குக் கலியாணம் நிச்சயம் செய்து விட்டுக் கிளம்பினால் அப்போது வாங்கிக் கொள்வேன்."

"கலியாணம் நிச்சயம் செய்ய வேண்டியது தான். ஆனால் அதற்கு இரண்டு கட்சியின் சம்மதம் அல்லவா வேண்டியதா யிருக்கிறது?" என்று ராகவன் கூறி விட்டுப் புன்னகை புரிந்தான். அதற்குப் பிரதியாகச் சீதாவும் புன்னகை செய்து விட்டுப் புறப் பட்டாள். சௌந்தர ராகவனுடைய வார்த்தைக்கும் புன்சிரிப்புக்கும் பொருள் என்ன என்பது அவள் மனதிற்குத் தெளிவாக வில்லை. ஆனால் அவளுடைய அந்தராத்மாவுக்கு ஒருவேளை அவற்றின் பொருள் தெரிந்திருந்ததோ, என்னமோ?

ஒரு விஷயம் நிச்சயம். கிட்டாவய்யரின் வீடு நோக்கிச் சீதா சென்று கொண்டிருந்தபோது வான வெளியில்



தேவர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் நின்று அவள் மீது மணம் மிகுந்த நறு மலர்களைத் தூவினார்கள். ஆயிரக் கணக்கான தேவலோகத்து இசைக் கருவிகளை இசைத்துக்கொண்டு இன்ப கீதங்களைப் பாடினார்கள். அந்த கீதங்களுக்கு இணங்க ஆனந்த நடனமாடிக் கொண்டே சீதா அவ்வீதியில் நடந்தாள். தனக்கு என்ன நேர்ந்து விட்டது, ஏன் தன் உள்ளம் இவ்வளவு உற்சாக மடைந்திருக்கிறது, இது நாள் வரையில் அநுபவித்தறியாத இந்தப் பொங்கி வரும் மகிழ்ச்சியின் மூலாதாரம் எங்கே?— என்பதை யெல்லாம் பற்றி அவள் சிந்தனை செய்ய வில்லை. உள்ளக் களிப்பும் உடம்பின் பூரிப்பும் ஒன்றாகி நினைவு அழிந்து மெய் மறந்த நிலையில் நடந்து சென்றாள்.

வீட்டுக்குப் போய்ச் சேர்ந்ததும் ஒருவாறு பிரமை நீங்கிற்று. சரஸ்வதி அம்மாளிடம் நேரே சென்று, "மாமி! நீங்கள் கவலைப்பட வேண்டாம். லலிதாவைப் பற்றி நான் புகழ்ந்த புகழ்ச்சியில் சம்பந்திகள் அப்படியே சொக்கிப் போய் விட்டார்கள். மாப்பிள்ளைகூடக் கேட்டுக் கொண்டுதானிருந்தார். நாளைக்கு அவசியம் கலியாணம் நிச்சயம் செய்து கொண்டுதான் போவார்கள்" என்றாள்.

சரஸ்வதி அம்மாள் உள்ளம் நிறைந்த நன்றி உணர்ச்சியோடு, "உன்னுடைய சமர்த்துக்கு மற்றவர்கள் திருடப் போக வேண்டியதுதான்! வயதானவர்களுக்கெல்லாம் உன்னுடைய சமர்த்தில் பத்தில் ஒரு பங்கு இருக்கக் கூடாதா? வந்த மனுஷர்களை யாராவது போய் எட்டிப் பார்க்கிறார்களா, பார்! எல்லாரும் இந்த வீட்டையே சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். சீமாச்சு மாமா என்ன சொன்னார் தெரியுமா? இந்த வரன் நிச்சயமாகும் என்று அவருக்குத் தோன்றவில்லையாம்! இவரை யார் கேட்டார்கள்? ஏதாவது 'அபிஷ்டு' என்று சொல்லி வைப்பதே சிலருக்குத் தொழில்!" என்று சொன்னாள்.

### இருபத்தேழாம் அத்தியாயம்

# இடி விழுந்தது!

கிட்டா வய்யரின் வீட்டு வாசலில் போட்டிருந்த கோடைப் பந்தலில் ராஜம் பேட்டைத் திண்ணை மகாசபை கூடியிருந்தது. சிலர் பந்தலின் கீழே பெஞ்சிகளிலும் சிலர் திண்ணை விளிம்பிலும் உட்கார்ந்திருந்தார்கள்.

உள்ளேயிருந்து வந்த கிட்டா வய்யரைப் பார்த்துப் பஞ்சு அய்யர், "கேட்டீர்களா! ஐயர்வாள்! உங்களுடைய பையன் சூரியா ஒரே போடாய்ப் போடுகிறானே? நாலு நாள் கல்யாணம் நடத்துகிறதும் கல்யாணத்துக்காக ஏகப்பட்ட ரூபாய் செலவு பண்ணுகிறதும் ரொம்பப் பிசகாம். வரதட்சணை கேட்கிறது, வாங்குகிறது எல்லாம் வெறும் மூடத்தனமாம்!" என்றார்.

"அவன் சொல்வதிலே என்ன அதிசயம்? இந்தக் காலத்திலே எல்லாருந்தான் அப்படிச் சொல்லுகிறார்கள். ஏழைகள் கஷ்டப்படுகிறபோது வீண் ஆடம்பரத்திலே பணம் செலவழிக்கிறது நியாயமல்லவென்று பேசுகிறார்கள்!" என்று கிட்டா வய்யர் தம்முடைய குமாரனைத் தாங்கிப் பேசினார்.

"அதோடு நிறுத்தினால் பரவாயில்லையே? பணத்தைச் செலவழிக்கக்கூடாது, செட்டாயிருக்க வேண்டும் என்று சொன்னால் சொல்லட்டும். அப்பா பாடு, பிள்ளை பாடு என்று விட்டு விடலாம். சூரியா பெரிய சோஷலிஸ்ட் மாதிரின்னா பேசறான்? குடியானவர்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடுகிறார்களாம். அவர்கள் உழைப்பினால் வருகிற பணத்தை நாம் ஆடம்பரத்திலே செலவழிக்கிறோமாம். 'இதெல்லாம் ரொம்ப நாள் நடக்காது!' என்று எச்சரிக்கை வேறே பண்ணுகிறான்!"

"பின்னே என்னங்காணும்! இப்படியே சத கோடி வருஷம் நடக்கும்

என்று நினைத்துக் கொண்டிருக்கிறீரோ? உலகம் போகிற போக்கு உமக்குத் தெரியவில்லை. 'உழுகிறவனுக்குத்தான் நிலம்' என்ற பிரசாரம் நடந்து வருகிறது. நீங்கள் கிணற்றுத் தவளைகளாய் இருக்கிறீர்கள்!" என்றார் சிமாச்சு வய்யர்.

"அப்பா! சிமாச்சு! நீயும் அவன் கட்சியில் சேர்த்துட்டயா? இன்றைக்கு 'உழுகிறவனுககு நிலம்' என்பார்கள். நாளைக்கு 'அறுக்கிறவனுக்கு நெல்லு!' என்பார்கள். அப்புறம் 'கொத்தனுக்கு வீடு!' 'வண்ணானுக்கு வேஷ்டி' 'டிரைவருக்கு மோட்டார்' 'டாக்டருக்கு மருந்து' 'போர்ட்டருக்கு ரயில் வண்டி' என்றெல்லாம் வரும். 'சமைக்கிறவனுக்குத் தான் சாதம்' என்று சொன்னாலும் சொல்வார்கள். விநாசகாலே வ்பரீத புத்தி!" என்றார் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

"பட்டாமணியத்துக்கு வரிப் பணம் என்றும் ஏற்பட்டுவிட்டால் எனக்கு ரொம்ப சௌகரியமாயிருக்கும்! சாஸ்திரிகளே! இதிலே யெல்லாம் ஆத்திரப்பட்டு என்ன பிரயோஜனம்? எது எது எப்போது நடக்க வேண்டுமோ அது நடந்துதானே தீரும்? காலத்திற்குத் தகுந்தாற்போலே நாமும் மாறிக்கொள்ள வேண்டியது தானே!" என்றார் கிட்டா வய்யர்.

"மாறிக்கொள்கிறோம், ஐயர்வாள்! மாறிக்கொள்கிறோம்! சரியான காரியமாயிருந்தால் காலத்தை யொட்டி மாற வேண்டியதுதான். முன்னே யெல்லாம் சிராத்தம் என்றால் மத்தியானம் மணி மூன்று ஆகும். இப்போது மணி பத்துக்கெல்லாப் பிராமணனுக்கு இலை போடவேணும் என்கிறார்கள். அதை ஆட்சேபிக்கிறோமா? காப்பி சாப்பிட்டு விட்டுத்தான் சிராத்தம் பண்ணுவேன் என்கிறான் கிரகஸ்தன். காலத்துக்கேற்ப இந்த மாறுதலை யெல்லாம் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் 'உழுகிறவனுக்குத்தான் நிலம்' என்கிற கொள்கை உமக்கு ஏற்க சரியாயிருக்கிறதா என்று கேட்கிறேன்" என்றார் சாஸ்திரிகள்.

"சரியோ, இல்லையோ, உலகம் ஒப்புக்கொண்டால் நாம் மட்டும் தடை செய்து என்ன பிரயோஜனம்!" என்றார் கிட்டா வய்யர்.

"உலகந்தான் ஒப்புக் கொள்ளட்டும்; பிரம்ம தேவனே ஒப்புக் கொள்ளட்டும். சரியில்லாததை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? காந்தி மகாத்மா இதைத் தானே படித்துப் படித்துச் சொல்கிறார்? 'நீ ஒருத்தனையிருந்தாலும் உனக்குச் சரியென்று தோன்றுகிறதைச் செய்!' என்கிறார். ஆனால் நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? சுயபுத்தியை உபயோகிக்க வேண்டாம், யாரோ எவனோ சொல்கிறதை அப்படியே ஒப்புக்கொள்ளு என்கிறீர்கள்."

"உங்களை யார் ஒப்புக் கொள்ளச் சொல்கிறார்கள்?"

"யார் சொல்கிறார்களா? இப்போது சூரியா தான் சொன்னான். நமக்குத் தானே அவன் பிரசங்கம் செய்தான்?"

"எல்லாம் இப்போது அப்படித்தான் சொல்லுவான்காணும்! கிட்டி முட்டி வரும்போது வேறு விதமாய்ச் சொல்வான். எங்கே! கிட்டாவய்யர் நிலத்தில் சூரியாவுக்கு உள்ள பங்கை உழுகிறவர்களுக்கு எழுதிக் கொடுத்து விடுவானா, கேளுங்கள்!" என்றார் சிமாச்சு வய்யர்.

"சிமாச்சு மாமா! எழுதிக் கொடுத்தாலும் கொடுப்பேன்; அல்லது நானே வயலில் இறங்கி உழுவேன். அப்போது நிலம் என்னுடையதாயிருக்கும்" என்றான் சூரியா.

"அப்படிச் சொல்லடா தும்மட்டிக்கா பட்டா! — என்றாலும். நீ மட்டுந்தான் உழுவாய் என்று நினைத்தாயோ? அத்தகைய காலம் வந்தால் நாங்கள் எல்லாரும் இடுப்பிலே துணியை வரிந்து கட்டிக் கொண்டு வயலில் இறங்கிவிட மாட்டோமா?" என்றார் பஞ்சுவய்யர்.

"அது வரையில் காத்திருப்பானேன், இப்போதிருந்தே நம் வாழ்க்கையைச் செப்பனிட்டுக் கொள்ளலாமே என்று சொன்னேன். நாமே உழுது பயிரிடுவது என்று ஏற்பட்டால் இப்படி யெல்லாம் நாலு நாள் கல்யாணத்துக்கு ஆடம்பரச் செலவு செய்ய முடியுமா?" என்றான் சூரியா.

"ஆகக்கூடி, சூரியாவின் பாயிண்ட் என்னவென்று இப்போது தெரிகிறது. லலிதாவின் கலியாணத்துக்கு அதிகமாகச் செலவு செய்துவிடக் கூடாது என்று அப்பாவுக்குப் புத்திமதி சொல்கிறான். அவ்வளவுதானே, சூரியா?" என்றார் சீமாச்சுவய்யர்.

"இல்லவே இல்லை அப்பாவிடத்தில் அப்படியெல்லாம் நான் அதிகப்பிரசங்கித்தனமாகப் பேசமாட்டேன்!" என்றான் சூரியா.

"அப்படியே சூரியா சொன்னாலும் நான் அதைக் கேட்கமாட்டேன். குடும்பத்தின் சொத்தில் புருஷக் குழந்தைகளைப்போல் பெண் குழந்தைகளுக்கும் சம பாகம் கொடுக்க வேண்டும் என்றுதான் இப்போதெல்லாம் பேசுகிறார்களே? லலிதாவுக்குச் சொத்தில் என்ன பாகம் உண்டோ, அதைத்தான் கலியாணத்துக்குச் செலவழிக்கப் போகிறேன்" என்றார் கிட்டாவய்யர்.

"ஒரு விஷயம், அப்பா! லலிதாவுக்குச் சொத்தில் பங்கு உண்டு என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். என்னுடைய கட்சியும் அதுதான். ஆனால் லலிதா சொத்தின் பாகத்தை நம் இஷ்டப்படி செலவழிக்க நமக்கு என்ன பாத்தியதை இருக்கிறது? அதை அவளுக்கே எழுதி வைத்துவிடுவதாயிருந்தால் எனக்குப் பூரண சம்மதம். வீண் ஆடம்பரக் கலியாணச் செலவுகளிலும் வரதட்சிணையிலும் செலவு செய்வதைத்தான் நான் ஆட்சேபிக்கிறேன்" என்றான் சூரியா.

"நீ ஆட்சேபித்தால் ஆட்சேபிக்க வேண்டியதுதான். ஊருக்கெல்லாம் ஒரு வழி நமக்கு ஒரு வழி என்றால் நடக்கிற காரியமா?"

"அது இருக்கட்டும், ஐயர்வாள்! எனக்கு ஒரு சந்தேகம் அதை ஒருவாம் தீர்த்து வைக்கிற வழியாக இல்லை. 'உழுகிறவனுக்கு நிலம்' என்று சொல்கிறார்களே? உண்மையிலே உழுகிறது யார்? மாடு அல்லவா கலப்பையை இழுத்துப் போய் உழுகிறது? அப்படியானால் உழுகிற மாட்டுக்குத்தானே நிலம் சொந்தம் என்றல்லவா ஏற்படுகிறது?" என்றார் பக்கத்து வேளாளத் தெருவிலிருந்து வந்திருந்த கர்ணம் வேலாயுத முதலியார்.

"கணக்குப்பிள்ளை! நல்ல போடு போட்டீர், ஓய்! சூரியா! இதற்கு என்னடா பதில் சொல்கிறாய்!" என்றார் சீமாச்சுவய்யர்.

சூரியா சிறிது நகைத்துத் தான் போனான். பிறகு "இது விளையாட்டுக் கேள்வி. நிலம் மாட்டுக்குச் சொந்தமாயிருக்க முடியாது. மாட்டை ஓட்டுகிற உழவனுக்குத்தான் சொந்தமாயிருக்க முடியும்" என்றான்.

"நீ சொல்கிறது சரி என்றே வைத்துக்கொள்வோம். சீமையிலே யெல்லாம் உழுகிறதற்கு டிராக்டர் என்று ஒரு மெஷின் வந்திருக்கிறதாம். ஒரு டிராக்டரைக் கொண்டு ஐந்நூறு ஏக்கரா நிலம் உழலாமாம். அந்த டிராக்டரைக் கொண்டு ஐந்நூறு ஏக்கரா உழுகிறானே அவனுக்கு அந்த ஐந்நூறு ஏக்கராவும் சொந்தம் என்று ஏற்படுமா? அப்படியானால் சொல்லு! நான் எப்படியாவது ஒரு டிராக்டர் வாங்கி விடுகிறேன். அதை ஓட்டவும் கற்றுக் கொண்டு விடுகிறேன்!" என்றார் வேலாயுத முதலியார்.

சூரியா சிறிது நேரம் யோசித்தான். பிறகு சொன்னான்: "நான் கூறியது ஒரு விதத்தில் தப்புத்தான். 'உழுகிறவனுக்கு நிலம்' என்று சொல்வது அவ்வளவு சரியல்ல. நிலம் உண்மையில் சர்க்காருடையது."

"நல்ல காரியம்! நிலமெல்லாம் வெள்ளைக்காரனுக்குச் சொந்தம் என்கிறாயா? ஏற்கெனவே அவன் வசூலிக்கும் வரிப் பளு தாங்க முடியவில்லை!"

"இப்போது வெள்ளைக்கார சர்க்காராயிருக்கிறபடியால் இப்படிச் சொல்கிறீர்கள். இந்தியாவில் கூடிய சீக்கிரம் சுயராஜ்ய சர்க்கார் ஏற்பட்டே தீரும். அப்போது நிலமெல்லாம் சர்க்காருக்குப் பொதுவாயிருந்தால் தேசமக்களின் பொதுச் சொத்து என்று ஏற்படும். ஆபீஸ் குமாஸ்தாவும் பள்ளிக்கூட உபாத்தியாயரும் சர்க்கார் சம்பளம் பெறுவது போல் உழவர்களும் சம்பளம் பெறுவார்கள். கலப்பையில் மாட்டைக் கட்டி உழுதா

லும் சரிதான்; டிராக்டரை ஓட்டி உழுதாலும் சரிதான்."

"அப்பொழுது உம்மைப் போன்ற மிராசுதாரர்கள் எல்லாம் என்ன செய்வதாம்? வாயிலே விரலை வைத்துக்கொண்டு நிற்பதோ?" என்று பஞ்சு வய்யர் கொஞ்சம் ஆத்திரமாய்க் கேட்டார்.

"உங்களுக்கு — பிராமணர்களுக்கு,— பரவாயில்லை, ஐயர்வாள்! எங்கேயாவது போய் எந்த உத்தியோகமாவது பண்ணிப் பிழைத்துக் கொள்வீர்கள்! ஒன்றுமில்லாவிட்டால் ஹோட்டலாவது வைத்து விடுவீர்கள். எங்கள் பாடுதான் ஆபத்தாய்ப் போய்விடும்!" என்றார் வேலாயுத முதலியார்.

மேற்கண்டவாறு திண்ணைப் பார்லிமெண்ட் சபையில் விவாதம் நடந்து கொண்டிருந்த சமயத்தில் சீமாச்சு வய்யரின் தர்ம பத்தினி அன்னம்மாள் விடுவிடுவென்று நடந்து வந்து கிட்டா வய்யர் வீட்டுக்குள் நுழைந்தாள். அவள் நுழைந்த சிறிது நேரத்துக்கெல்லாம் வீட்டுக்குள்ளே ஒரு பயங்கர பூகம்பம் ஏற்பட்டு விட்டதாகத் தோன்றியது. ஆக்கிரம் நிறைந்த குரல்களில் ஒரே கூச்சல். யாரோ விம்மி அழுகிற குரலும் கேட்டது. இவ்வளவு சத்தங்களுக்கிடையில் சரஸ்வதியின் தாயார், "இந்தக் குடிகேடிகளை வரச் சொல்ல வேண்டாமென்று சொன்னேனே, கேட்டாயா? பெண் பார்க்க வருகிறதற்கு முன்னாலே மெனக்கெட்டு உன்னைத் தனியாக அழைத்துப் போய்ச் சொன்னேனே. அதையாவது கேட்டாயா? 'ஊற்றுச் தண்ணீரை வெள்ளம் கொண்டு போய் விடாது' என்று சொன்னாயே. இப்போது கொண்டு போய் விட்டதேடா? என்ன செய்யப் போகிறாய்? எல்லாரும் என்னை அசடு, பைத்தியம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்! நான் அசடுமில்லை; பைத்தியமும் இல்லை. நீதான் சுத்த நிர்மூடம்! இல்லாவிட்டால் பூனைக் குட்டியை மடியிலே கட்டிக் கொண்டு சகுனம் பார்ப்பாயோ?" என்று பிரசங்கம் செய்த சத்தம் கேட்டது. அதற்குச் சரஸ்வதி அம்மாள் "இந்த மாதிரி அநியாயம் நடக்கும் என்று யார் அம்மா கண்டது?......அடே சுண்டு! உங்க அப்பாவைக் கூப்பிடு. இங்கே வீடு பற்றி எரிகிறது, அங்கே என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது? கூப்பிடடா உடனே!" என்றாள். இதுவும் அங்கிருந்த எல்லாருடைய காதிலும் விழுந்தது. கிட்டா வய்யர் அவசரமாகவும் கோபமாகவும் எழுந்து வீட்டுக்குள்ளே போனார்.

"என்னடி இங்கே ரகளை? இடி யார் தலையிலே விழுந்து விட்டது?" என்று கேட்டார்.

"ஆமாம்; இடிதான் விழுந்துவிட்டது. என் தலையிலே, உங்கள் தலையிலே, குழந்தை லலிதாவின் தலையிலே எல்லாருடைய தலையிலும் விழுந்து விட்டது. சீமாச்சு மாமாவாத்து மாமி என்ன சொல்கிறாள் என்று கேளுங்கள்! அழகான மனுஷாளைச் சென்னைப் பட்டணத்திலிருந்து வரவழைத்தேளே, அவர்களுடைய காரியத்தைக் கேளுங்கள். பம்பாயிலிருந்து அருமைத் தமக்கையைச் சீராட்டக் கூப்பிட்டுக் கொண்டு வந்தீர்களே! அதன் பலன் என்ன ஆயிற்று என்று கேளுங்கள்!" — இவ்விதம் சரஸ்வதி அம்மாள் கூச்சல் போட்டாள்.

"ஆகட்டும், எல்லாம் கேட்கிறேன். நீ மட்டும் கொஞ்சம் மெதுவாய்ப் பேசு! யாருக்கோ பிராணன் போய் விட்டதுமாதிரி சத்தம் போடாதே!" என்றார் கிட்டா வய்யர்.

# இலங்கையிலே!

ரஜனி

கொழும்பு, 18-6-'48.

சென்ற ஏழெட்டுத் தினங்களாக இலங்கை இந்தியர்கள் பெரும் அதிர்ச்சி யடைந்திருக்கிறார்கள். இலங்கை அரசாங்க நாணயச் செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரியின் திடீர் உத்தரவுகள்தான் இதற்குக் காரணம்.

சில வாரங்களுக்கு முன்னால் இலங்கை பொக்கிஷ மந்திரி ஸ்ரீ ஜே. ஆர். ஜயவர்த்தன லண்டனுக்குப் போய் இலங்கையின் ஸ்டர்லிங் நிலுவைகளைப் பற்றி ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு வந்தார். அந்த ஒப்பந்தம் இம்மாதம் முதல் தேதியிலிருந்து அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. அத்துடன் இலங்கையிலிருந்து வெளி நாடுகளுக்குப் பணம் செல்லுவதைக் கட்டுப்படுத்த செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரி ஸ்ரீ என். யு. ஜயவர்த்தன பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் சில சட்ட திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்.

## பணம் அனுப்பத் தடைகள்

இந்தச் சட்ட திட்டங்கள் முற்றிலும் எதிர்பாராமல் திடீரென்று பிரகடனம் செய்யப்பட்டுள்ளன. இவைகளின் பிரகாரம் (1) இலங்கையை விட்டுக் கட்டுப்பாடு அதிகாரியின் அனுமதியில்லாமல் ஒரு ரூபாய்கூட எவரும் அனுப்பக் கூடாது; (2) கட்டுப்பாடு அதிகாரியினால் அளிக்கப்படும் பர்மிட் இல்லாமல் போஸ்டாபீஸ்களில் மணியார்டர்கள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது; (3) வெளி நாடுகளுக்குப் பணம் அனுப்ப ஒருவர் மனுச் செய்து கொண்டால் அந்த மனுவை ஆராய்ந்து பர்மிட் கொடுக்கும் அதிகாரம் கட்டுப்பாடு அதிகாரியிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது; (4) ரிஜிஸ்டர், இன்ஷூரன்ஸ் கவர்களுக்குள் ரூபாய் நோட்டுகளை வைத்தனுப்புவது முற்றிலும் தடை செய்யப்பட்டிருக்கிறது; (5) இந்தியாவுக்கு கப்பலில் செல்லுவோர் பர்மிட் இல்லாமல் 140 ரூபாய்க்கு மேல் எடுத்துச் செல்லக் கூடாது; (6) இலங்கையிலிருந்து சாமான்கள் ஏற்றுமதி செய்தால் அதற்குரிய பணம் ஆறு மாத காலத்திற்குள் இலங்கைக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். சாமான்களை இறக்குமதி செய்தால் அதற்குரிய பணத்தைப் பர்மிட் பெற்ற பிறகே அனுப்ப முடியும்; (7) பாங்குகளும் இன்ஷூரன்ஸ் கம்பெனிகளும் அவைகளின் பணத்தை இலங்கையிலேயே முதலீடு செய்ய வேண்டும்; (9) இலங்கையில் முதலீடு செய்த பணத்தை இந்தியாவுக்கு மாற்றிக் கொண்டு போக அனுமதிக்கப்பட மாட்டாது.

## இந்தியக் குடும்பங்கள் தவிப்பு

இலங்கையிலுள்ள பெரும்பாலான இந்தியர்களின் குடும்பங்கள் இந்தியாவில்தானிருக்கின்றன. அவற்றின் பராமரிப்புக்கு இங்கிருந்து பணம் அனுப்பினால்தான் உண்டு. இதை உத்தேசித்து ஒரு நபர் ஒரு சமயத்தில் 50 ரூபாய்க்கு மேற்படாமல் பர்மிட் இல்லாமலே மணியார்டர் செய்யலாமென்று கட்டுப்பாடு அதிகாரி ஒரு சலுகை கொடுத்திருந்தார். இதைச் சிலர் துஷ்பிரயோகம் செய்தனர். ஒரே நாளில் பல தபாலாபீஸ்களிலிருந்து ஐம்பது ஐம்பதாக அநேகம் மணியார்டர்களை அனுப்ப ஆரம்பித்தனர். இதைக் கண்டு பிடித்ததும் பர்மிட் இல்லாமல் மணியார்டர் செய்வதையே கட்டுப்பாடு அதிகாரி முற்றிலும் தடை செய்துவிட்டார். பர்மிட் வாங்குவதற்காகக் கட்டுப்பாடு அதிகாரியின் காரியாலயத்தில் தினசரி ஆயிரக் கணக்கானவர்கள் முற்றுகை யிடுகிறார்கள். அவர்களில் பர்மிட் கிடைப்பது சிலருக்குத்தான்.

## வி. ஆர். ராஜவின் தொண்டு

ஒரு சிலர் உரிமையைத் துஷ்பிரயோகம் செய்து ஒரே நாளில் பல மணியார்டர்கள் அனுப்பியது உண்மையாயிருக்கலாம். அதற்காக எல்லா இந்தியர்களையும் தண்டிப்பதா? இந்தியாவிலுள்ள அவர்களுடைய குடும்பங்களைத் தவிக்க விடுவதா? இங்குள்ள ஓரியண்டல் இன்ஷூரன்ஸ் கம்பெனியின் காரியதரிசியான வி. ஆர். ராஜு ஒரு அத



இம்மாதம் ஏழாந் தேதி சென்னை ஜூபிடர் ஏர்வேஸ் கம்பெனியின் டில்லி - சென்னை விமானப் போக்குவரத்தைப் பிரதமர் ஸ்ரீ ஓ. பி. ராமசாமி ரெட்டியார் ஆரம்பித்துவைத்தார்.

கோஷ்டியுடன் கட்டுப்பாடு அதிகாரியைப் பேட்டி கண்டு இந்தியர்களின் கஷ்டங்களை எடுத்துச் சொல்லி முறையிட்டார். அதன் பயனாக ஓரளவு நிவாரணம் ஏற்பட விருக்கிறது. இலங்கையில் உத்தியோகம் பார்க்கும் இந்தியர்கள் அவர்களுடைய குடும்பங்களின் பராமரிப்புக்காகவே பணம் அனுப்புவதாக அவர்கள் வேலை செய்யும் ஸ்தாபனத் தலைவர்களின் சிபார்சுக் கடிதங்களுடன் மனுச் செய்து கொண்டால், இதே போலத் தோட்டத் தொழிலாளிகளும் அவர்களுடைய தோட்ட மானேஜர்களின் சிபார்சுக் கடிதங்களோடு மனுச் செய்தால், பணம் அனுப்ப பர்மிட் கொடுக்கிறேன் என்று கட்டுப்பாடு அதிகாரி ஸ்ரீ ராஜனிடம் உறுதி கூறியிருக்கிறாராம். இந்தப் புதிய ஏற்பாடு திருப்திகரமாக வேலை செய்கிறதா என்பது இனித்தான் தெரியும்.

## இந்தியர் செத்தாலும் ஆபத்து

இலங்கையிலுள்ள இந்தியர்கள் தங்கள் ஆயுளை இன்ஷ்யூர் செய்திருந்து, இங்கு இறந்தால் ஆபத்துதான். இறந்தவர்களின் வாரிசுதாரருக்குப் பாலிஸிக்குரிய பணத்தை இந்தியாவில் செலுத்த அனுமதிக்கப்பட மாட்டாது. வாரிசுதாரர் இந்தியாவிலிருந்து இலங்கைக்கு வந்து இலங்கையிலுள்ள இன்ஷ்யூர் கம்பெனியின் கிளை ஸ்தாபனத்தினிடம் இறந்தவரின் பாலிஸிக்குரிய பணத்தைப் பெறவேண்டும். சரி, அப்படிப் பெற்றாலும் அதை இந்தியாவுக்கு எடுத்துச் செல்ல அனுமதிக்கப்படுவார்களா? மாட்டார்களென்கிறது சட்டம். இந்த அநீதியை ஸ்ரீ ராஜன் கட்டுப்பாடு அதிகாரியிடம் சுட்டிக் காட்டிய பொழுது, "ஆகட்டும்; யோசித்துச் சொல்லுகிறேன்" என்று பதிலளித்திருக்கிறார் ஸ்ரீ ஜயவர்த்தனா.

## அசோசியேடட் பிரஸ் தூங்குகிறது!

"இந்தியாவுக்குப் பணம் அனுப்ப இத்தனை கஷ்டமென்றால் இங்கு உத்தியோகம் பார்ப்பானேன்?" என்று அநேக இந்தியர்கள் நினைக்கிறார்கள். பலர் ஏற்கனவே இந்தியாவுக்கு மூட்டை கட்டிவிட்டார்கள். குடியேற்றத் தடைக்குச் சட்டம் இயற்றுவதை விட அதிதீவிரமாக வேலை செய்கிறது பணம் அனுப்புவதைத் தடை செய்துள்ள சட்ட திட்டங்கள். இலங்கை இந்தியர்களின் நிலைமை இவ்வளவு அமர்க்களப் படுகையில் இதைப் பற்றி இந்தியப் பத்திரிகைகளிலே இதுவரை ஒரு செய்தியும் பிரசுரமாகாமலிருப்பது ஆச்சரியமாயிருக்கிறது. "இங்குள்ள அசோசியேடட் பிரஸ் ஸ்தாபனம் தூங்குகிறதா?" என எல்லோரும் கேட்கிறார்கள். பாலஸ்தீனச் சண்டையையும் அமெரிக்காவில் நடக்கும் சம்பவங்களையும் விடாமல் பிரசுரிக்கும் இந்தியப் பத்திரிகைகள் அண்டையிலுள்ள இலங்கையில் இந்தியர்கள் படும் அவதியைப் பற்றி ஒரு வரியும் பிரசுரிக்காமலிருப்பது விநோதமில்லையா?

இப்பொழுது
நடைபெறுகிறது



# ஜெமினி
# ஞான
# சௌந்தரி

சென்னை
**கிரௌன் · ஸ்டார்**
இரு தியேட்டர்களிலும்
மற்றும் ராஜதானி பூராவும் உள்ள
முக்கிய நகரங்களிலும்

... **கண்ணாம்பா** .....
**எம்.கே. ராதா · வி.எஸ். சுசீலா**
டி. ஆர். ராமசந்திரன் · ... நாராயண ராவ்
நடித்தது

டைரக்ஷன்
.... **முருகதாஸா** ....
தயாரிப்பு
**நாயினா** .......



வேண்டியிருக்கும். இது ஒன்றும் அவர்களுக்குப் புதிதல்ல; தலைமுறை தலைமுறையாகவே அவர்களைத் தொடர்ந்து வரும் வழக்கம். இதில் வியப்புமில்லை, திகைப்புமில்லை!

செங்கண்ணனும் கண்ணாத்தாளும் தங்கள் இருவருக்கும் ஒரே இடத்தில் வேலை கிடைக்க வேண்டுமென்று எப்பொழுதுமே விரும்புவதில்லை. வெவ்வேறு இடங்களில் வேலை கிடைத்தாலும் அவர்கள் மனம் கோணாமல் செல்வார்கள். இரவு வீடு திரும்பியதும் மறுநாள் மத்தியானத்துக்கும் சேர்த்தாற்போல் சமையல் வேலை நடக்கும். பொழுது விடிந்ததும் கையில் கட்டுச் சாதத்துடன் அவர்களுடைய 'வயிற்றுப் பிரயாணம்' ஆரம்பமாகும். வீட்டைப் பற்றியோ அந்தத் தம்பதிகளுக்குக் கவலையே யில்லை. ஏனெனில் திருடர் பயம் தான் அவர்களுக்குக் கொஞ்சங்கூடக் கிடையவே கிடையாதே!

*

செங்கண்ணன் தம்பதிகளுடைய குடிசைக்கு அடுத்தாற்போல்தான் நாங்கள் நாலு பேர் சேர்ந்து ஒரு வாசகசாலை ஆரம்பித்திருந்தோம். இந்த வாசகசாலை பொது ஜன சௌகரியத்துக்காக ஏற்படுத்தப்பட்டது என்று சொன்னால் நாங்கள் பொய் சொன்னவர்களாவோம். ஒண்டுக் குடித்தனம் இருந்த எங்களுக்குச் சிறிது நேரமாவது நிம்மதியுடன் காலம் கழிக்க ஏதாவது ஓர் இடம் வேண்டியிருந்தது. அதற்காக ஆரம்பிக்கப்பட்ட அந்த வாசகசாலையில் எங்களுக்கு இனாமாகப் பல பத்திரிகைகளை வாசிக்கும் வசதியும் கிடைத்தது. இதற்குக் காரணம் எங்களுடைய கஞ்சத்தனம் அல்ல; காசில்லாத கஷ்டந்தான்.

சாயந்திர வேளைகளில் அநேகமாக என்னை அந்த வாசகசாலையில்தான் பார்க்கலாம். ஏதாவது ஒரு தினசரிப் பத்திரிகையைப் பிரித்து வைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பேன். என்னையும் என்னுடைய நண்பர்களையும் தவிர வேறு யாரையாவது அந்த வாசகசாலையில் பார்ப்பது அபூர்வம். உலகச் செய்திகளைத் தெரிந்துகொள்வதில் அங்கிருந்தவர்களுக்கு அவ்வளவு ஆர்வம் இருந்தது!

எந்தக் கவலை எப்படியிருந்தாலும் செங்கண்ணன் மட்டும் நான் பத்திரிகை படிக்கும்போதெல்லாம் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து விடுவான். அவனுக்கு உலகச் செய்திகளைத் தெரிந்துகொள்வதில் ஆர்வம் இல்லாவிட்டாலும் அரிசிச் செய்தியைத் தெரிந்துகொள்வதில் அவ்வளவு ஆர்வம்!

நான் பத்திரிகையைப் பிரித்ததும் பிரிக்காததுமாயிருக்கும்போதே, "என்னங்க, அரிசியை எப்போ கட்டிப் போடப் போறாங்களாம்?" என்பான் அவன்.



"அரிசியையாவது, உட்டையாவது! இன்னும் இரண்டு வருஷம் அருமைத்துப் போடுவதற்கல்லவா யோசனை செய்து கொண்டிருக்கிறார்கள்?" என்பேன் நான்.

"சரியாய்ப் போச்சு, போங்க! இப்பவே அவன் கொடுக்கிற அரிசி இரண்டு நாளைக்குக் காணலே; படி ஒண்ணரை ரூபாய்க்கு வாங்கிச் சாப்பிட வேண்டியிருக்குது! இன்னும் குறைச்சான்னு பசிக்காம இருக்குமாமே, அந்தப் பரலோகத்தைத் தேடிப் போகவேண்டியதுதான்!"

"அங்கேயும் உன்னைப் போன்றவர்களுக்கெல்லாம் இடம் கிடைக்காது, தம்பி! புண்ணியம் செய்தவர்களுக்குத்தான் இடம் கிடைக்குமாம்,—இதோ பார், நம்ம மாரியம்மன் கோயிலுக்கு ஒருவர் இந்த மைதானத்தை எழுதி வைத்திருக்கிறாரோ இல்லையோ, அம்மாதிரி நீயும் ஏதாவது செய்ய வேண்டுமாக்கும்!"

"அதற்கெல்லாம் நான் எங்கே போவேனுங்க?" என்பான் அவன்.

நான் அவனுடைய பேச்சை மாற்ற எண்ணி, "செங்கு, உனக்கு ஒரு சேதி தெரியுமா?" என்பேன்.

"என்ன சேதிங்க?" என்று கேட்பான் அவன் ஆவலுடன்.

"நமக்குத்தான் சுயராஜ்யம் வந்துவிட்டதென்று உனக்குத் தெரியுமே! இனிமேல் நம் தலைவர்கள் ஒன்று செய்யப் போகிறார்களாம். அதாவது, உன்னைப் போன்ற ஏழைத் தொழிலாளிகளுக்கு முதலாளிகள் தங்களுக்கு வரும் லாபத்திலே பங்கு கொடுக்க வேணுமென்று சட்டம் செய்யப் போகிறார்களாம்!"

"உம்... விட்டுத் தள்ளுங்க! என்னை பொத்தவங்க பிழைப்புத்தான் தினம் ஒரு முதலாளியைத் தேடிக்கிட்டுப் போறதாயிருக்குதுங்களே! நாங்க எந்த முதலாளியைக் காணப் போறோம், எந்த லாபத்தைக் காணப் போறோம்?"

"சரி, போகட்டும். உனக்கு இன்னொரு சேதியாவது தெரியுமா? உங்களுக்கெல்லாம் ஏதாவது வியாதி வெக்கை வந்தால், இனாமாகவே வைத்தியம் செய்வதற்கு வேறே ஏற்பாடு செய்யப் போகிறார்களாம்!"

"அதைவிட இன்னொண்ணு செய்யலாமுங்களே! இனாமா மருந்து கொடுத்து உயிரோடு வதைக்கிறதைவிட, நல்ல விஷமாப் பார்த்து ஒரு துளி கொடுத்து உயிரில்லாமச் செய்துப்பிடலாமுங்களே!"

"என்ன செங்கு, இதெல்லாம் உன்னைப் போன்றவர்களுடைய நன்மைக்குத்தான் என்று உனக்குத் தெரியமாட்டேன் என்கிறதே!— சரி, இன்னும் ஒரே ஒரு சேதி கேளு: உனக்குப் பின்னால் உன் பெண்டாட்டி, பிள்ளை எப்படிப் பிழைக்குமென்று நீ கவலைப்படுகிறாயா, இல்லையா?"

"ஆமாங்க!"

"அதற்கும் அவர்கள் ஒரு வழி செய்யப் போகிறார்கள். அதாவது, உங்களையெல்லாம் கட்டாயமாக 'இன்ஷூரன்ஸ்' செய்து கொள்ளச் சொல்லப் போகிறார்கள்!"

"அப்படின்னா......?"

"நீ செத்த பிறகு உன் பெண்டாட்டி பிள்ளைகள் பிழைத்துக் கொள்ளுவதற்கு ஏதாவது பணம் கிடைக்கும்."

"உயிரா யிருக்கிறப்போ......?"

"ஒன்றும் கிடைக்காது!"

"சரி, அப்படின்னா அதையும் விட்டுத் தள்ளுங்க!"

"சரி சரி; நீ இப்படியே பேசிக்கொண்டு போனால், நான் உன்னையே விட்டுத் தள்ள வேண்டியதாய்த்தான் இருக்கும்!" என்பேன் நான்.

செங்கண்ணன் லேசாகச் சிரித்துக் கொண்டே அந்த இடத்தை விட்டு நகர்ந்து விடுவான்.

★

அன்று எதிர்பாராத விதமாகச் செங்கண்ணன் தம்பதிகளுக்குக் குறைந்த பட்சம் ஆறு மாதங்களுக்குக் குறைவில்லாத வேலை கிடைத்தது. அவர்களுக்கு மட்டும் என்ன? அங்கிருந்தவர்கள் எல்லோருக்குமே கிடைத்தது. பிரபல கண்ட்ராக்டரான கச்சாபகேசனின் ஆட்கள் வந்து அவர்கள் அனைவரையும் அழைத்துச் சென்றார்கள். செங்கண்ணனின் சந்தோஷத்துக்குக் கேட்க வேண்டுமா? "அப்பாடா! ஆறு மாதத்துக்குக் கவலையில்லை!" என்று எண்ணி அவன் ஒரே ஆனந்தத்தில் மூழ்கி விட்டான்.

அந்த ஆனந்தம் அன்று மாலை அவன் என்னைச் சந்திக்க வந்தபோதும் இருந்தது. வந்ததும் வராததுமாக, "இந்தாங்க, நாலணா!" என்று அவன் என்னிடம் ஒரு நாலணாக் காசை எடுத்துக் கொடுத்தான்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை; "இந்தக் காசு எதற்கு?" என்று கேட்டேன்.

"சும்மா வச்சு வையுங்கோ! இப்படித் தினந்தினம் ஒரோரு நாலணாவா உங்கக்

விட்ட கொடுத்துக்கிட்டு வரேன்; எல்லாத்தையும் சேர்த்து நான் கேட்கிறப்போ மொத்தமாக் கொடுங்க! எங்கக் குடிசை ரொம்ப நாளா வானத்தைப் பார்த்துக்கிட்டு நிற்குது; மழை பெஞ்சா உங்க வாசகசாலையைத் தேடி ஓடிவர வேண்டியிருக்குது. அதைப் பிரித்துக் கட்டணுமில்லே. அதுக்குத்தான் இந்த காலணாக் காசு! அதில்லாம, எனக்கு ஒரு வேஷ்டி, என் பெண்டாட்டிக்கு ஒரு புடவை, குழந்தைக்கு ஒரு சட்டை எல்லாம் வாங்கணும். எத்தனையோ நாளுக்குப் பிறகு இன்னிக்குத்தான் எங்க ரெண்டு பேருக்கும் நல்ல வேளையா ஒரு ஆறு மாசத்துக்கு வேலை கிடைச்சிருக்குதுங்க! எனக்கு ஒரு ரூவா கூலி; கண்ணுத்தாவுக்கு முக்கா ரூவா கூலி. ஒண்ணரை ரூவாயிலே சாப்பிட்டுக்கிட்டு மிச்சம் காலணாவை உங்கக்கிட்ட சேர்த்து வைக்கலாம்னு பார்க்கிறோம்!" என்றான் அவன்.

"அப்படியானால் சரி!" என்றேன்.

ஆனால் அவனுடைய உறுதி ஒரு வாரம் கூட நீடிக்கவில்லை. ஐந்தாவது நாளே அவன் என் வீட்டைத் தேடி ஓடோடியும் வந்து, "என் எண்ணத்திலே மண் விழுந்து போச்சுங்க! கல்லு வரலேன்னு எங்களுக்கு இன்னிக்கு வேலை யில்லே; அந்த ஒரு ரூவாயைக் கொடுங்க, சாப்பாட்டுக்கு!" என்றான். நானும் கொடுத்து விட்டேன்.

இப்படியே அவன் நாலைந்து நாட்கள் என்னிடம் காலணா கொடுப்பதும், ஐந்தாவது ஆறாவது நாள் வந்து சேர்த்ததை வாங்கிக் கொண்டு செல்வதுமாக இருந்தான். 'விதியை வெல்லப் பார்க்கும் அவனுடைய முயற்சிக்கு இவ்வளவு சோதனையா!' என்று எண்ணி என் மனம் வருந்தும். ஆனால், அவனுக்கு ஏதாவது உதவி செய்வதன் மூலம் அந்த வருத்தத்தைப் போக்கிக் கொள்ளும் சக்தியை நான் பெற்றிருக்கவில்லை; ஆண்டவனும் எனக்குக் கொடுத்திருக்கவில்லை.

★

இந்த நிலையில் ஒரு மாதத்துக்குப் பிறகு ஒரு நாள் அவன் என்னிடம் வந்து, "என்னங்க, உங்களாலே எனக்கு ஒரு உதவி செய்ய முடியுங்களா?" என்றான்.

"என்ன உதவி?" என்றேன்.

"எனக்கு ஒரு குழந்தை இருக்குது பாருங்க, அதாலே ரொம்பத் தொந்தரவா யிருக்குதுங்க! சேத்து வேலை சமயத்திலே அது 'வாள், வாள்' என்று கத்தித் தொலைக்குது. பெத்தவளுக்கு மனசு கேட்குமா? சித்த எடுத்துக் கொஞ்சம் பால் கொடுத்தா. அந்தச் சமயம் பார்த்து எசமான் வந்துட்டாரு. அப்புறம் என்ன? 'குழந்தைக்குப் பால் கொடுக்கிறதுன்னு நீ வீட்டிலேயே இருந்துக்க, இங்கே வரவேணாம்'னு சொல்லிப்பிட்டாரு!"

"அப்படியானால், அந்தச் சின்னஞ் சிறு சிசுவோடு வேலைக்கு வந்து வயிறு வளர்க்க வேண்டியிருக்கும் உங்களுடைய கதியைப் பற்றி அவர் கவலைப்படவில்லை; குழந்தைக்குப் பால் கொடுப்பதால் தன் வேலைக்குக் குந்தகமாய்ப் போய் விடுகிறதே என்றுதான் கவலைப்பட்டார் போலிருக்கிறது!"

"ஆமாங்கண்ணு!"

"அப்புறம் நீ என்ன சொன்னாய்?"

"'கோவிச்சுக்காதீங்க, எசமான்! நாளையிலேருந்து குழந்தையை வீட்டிலே விட்டுட்டு வந்துடறோம்'னு சொன்னேன்."




கம்பர்:—சுந்தரத்துக்குப் பெண் பிறந்து நாலு மாதம் ஆகிறது; அவள் வீட்டுக்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுக்கப் போகிறேன் என்கிறீர்களே, என்ன உளறல் இது?

வித்வான்:—அவர் பெண் ரொம்ப அழுகிறதாம்; தூங்கவே மாட்டேங்கிறதாம். தினம் நீலாம்பரி பாடி தூங்கப் பண்றதுக்குத்தான் என்னைப் பேசி இருக்கிறார்கள்!

எங்க வயித்திலே பாலை வார்த்தாப்போல 'சரி'ன்னாரு. ஆனா இப்படிச் சொல்லித் தப்பிச் விட்டோமே ஒழிய, நாளைக்குக் குழந்தையை எங்கே விட்டுட்டுப் போறதுன்னு தெரியலே!—குழந்தையும் அப்படி ஒண்ணும் சின்னக் குழந்தை யில்லே; பெரிய குழந்தைதான். யாராச்சும் வேளா வேளைக்குக் கொஞ்சம் பசும் பால் வார்த்து வச்சிருந்தா பேசாம இருக்கும்.........."

"அப்படியென்றால் உன்னுடைய குழந்தையை என் வீட்டிலே விட்டுவிட்டுப் போகிறேன் என்கிறாயா?"

"ஆமாங்க......!"

"அதற்கு எதாவது ஆபத்து நேர்ந்தால்......?"

"அப்படி ஏதாச்சும் நேர்ந்தாத்தான் ரொம்ப நல்லதாப் போச்சுங்களே!"

இதைச் சொல்லும்போது அவன் குரல் கம்மியது; என்னுடைய நெஞ்சம் நெகிழ்ந்தது.

இருந்தாலும், "எனக்கென்னமோ சம்மதந்தான்! ஆனால் என் வீட்டுக்காரி ஒப்புக் கொள்ள வேண்டுமே! கணவன்-மனைவியா யிருந்தாலும் நான் வேறு, அவள் வேறாக வல்லவா இருக்கிறோம்?—எதற்கும் நீ கொஞ்சநேரம் இங்கேயே இரு. நான் அவளைக் கேட்டுக் கொண்டு வந்து சொல்கிறேன்!" என்றேன்.

"அப்படியே செய்யுங்க!" என்றான்.

நான் உள்ளே சென்று என் சகதர்மிணியிடம் நடுங்கும் குரலில் விஷயத்தைச் சொன்னேன். அத்துடன், "இம்மாதிரி ஏழைகளுக்கு இரங்குவது ஏகாதசி விரதம் இருப்பதைக் காட்டிலும் சிறந்தது!" என்றும் சொல்லி வைத்தேன்.

அவ்வளவுதான்; ஆண் சிங்கமெல்லாம் வெட்கித் தலை குனியும்படியாக அந்தப் பெண் சிங்கம் என்னை ஏறிட்டுப் பார்த்தாள். நான் தலை குனிந்து வெளியே வந்தேன். என் முகபாவத்திலிருந்தே செங்கண்ணன் விஷயத்தைத் தெரிந்து கொண்டு விட்டான். "என்னாலே உங்களுக்கு ஏனுங்க வருத்தம்? நாளையிலேருந்து நான் அவளை வேறே எங்கேயாச்சும் வேலை பார்த்துக் கிடச் சொல்றேன்!" என்று கூறிவிட்டு, அவன் போயே போய்விட்டான்.

★

மறு நாள் முதல் கொண்டு கண்ணுத்தா பழைய இடத்துக்கே போய் நிற்க ஆரம்பித்தாள்; வேலை கிடைத்தபோது செய்தாள்; கிடைக்காதபோது வீடு திரும்பினாள். செங்கண்ணன் மட்டும் கண்ட்ராக்டர் கச்சாபகேசனிடமே வேலை பார்த்து வந்தான். ஆனால், தினசரி நாலணா மிச்சப்படுத்த வேண்டுமென்ற அவன் மனோரதம் மட்டும் நிறைவேறவே யில்லை.

ஆறு மாதங்களுக்கு மேலேயே 'அந்தி பவனம்' என்ற அந்த அழகான பங்களாவின் வேலை நடந்தது. 'பிளான்' வரைந்து கொடுத்தவர் 'பீஸை'ப் பெற்றுக் கொண்டு போய்விட்டார்; செங்கண்ணனைப் போன்றவர்கள் சேற்றிலும் சகதியிலும் உழன்றனர்; கண்ணுத்தாளைப் போன்றவர்கள் கல்லையும் காரையையும் சுமந்தனர்; கொத்தனார்களோ பதை பதைக்கும் வெய்யிலில் காண்டியும் கையுமாகக் கற்களைக் கணக்காக அடுக்கினர்; தச்சர்களோ உளியும் கொட்டாப்புளியுமாக உட்கார்ந்து, வியர்வை சொட்டச் சொட்ட மரத்தைப் 'போடு, போடு' என்று போட்டனர். இவர்களை யெல்லாம் மேஸ்திரி என்னும் ஒரு கூலி, தானும் அவர்களைப்போல் ஒரு கூலி என்பதையே அடியோடு மறந்து, அடிக்கடி மிரட்டிக் கொண்டிருந்தான்!

அவ்வளவு எஜமான விசுவாசமுள்ளவன் போல் நடித்து வந்த அவன், ஆளுக்கு ஓரணா, இரண்டணா 'தண்டக் காசு' அழும் போது மட்டும் அக்கம் பக்கம் பார்த்து வாங்கிப் பையில் போட்டுக் கொண்டான்!

அவன் 'பார்வை' போதாதென்று எஞ்சினியோ என்னமோ, அடிக்கடி வந்து தன் 'விலையுயர்ந்த பார்வை'யை 'அந்தி பவன'த்தின் மீது செலுத்தி வந்தார் கச்சாபகேசன். கட்டிட வேலை முடிந்தது; கடைசியில் கணக்குப் போட்டுப் பார்த்தார்; எல்லாம் போக ரூபாய் ஏழாயிரத்துச் சொச்சம் மிச்ச மென்று தெரிந்தது.

அடுத்த சில நாட்களுக்கெல்லாம் அவர் தம்மிடமிருந்த பழைய 'போர்டு மாடல்' கார் ஒன்றை விற்றுத் தொலைத்தார். அத்துடன் 'அந்தி பவன'த்தின் வாயிலாகக் கிடைத்த ரூபாய் ஏழாயிரத்துச் சொச்சத்தையும் சேர்த்து ஒரு பேஷான 'ப்யூக்' கார் வாங்கி மகிழ்ந்தார்.

இது 'அந்தி பவன'த்தின் மூலம் கச்சாபகேசனின் வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு சிறு மாறுதல்.

ஆனால், அந்த 'அந்தி பவன'த்தின் சிருஷ்டி கர்த்தாக்களான செங்கண்ணன், கண்ணுத்தா முதலியவர்களின் வாழ்க்கையிலோ......?

எந்தவிதமான மாறுதலும் இல்லை!




## ரொம்ப சரி!

வாங்குபவர்:—எனக்கு இரண்டு ஹார்மோனியங்கள் வேண்டும்.

கடைக்காரர்:—ஆஹா! எடுத்துக் கொள்ளுங்கள். இன்னும் என்ன வேண்டும்?

வாங்குபவர்:—பணம் அடுத்த மாதச் சம்பளத்தில்தான் தருவேன். என்ன சொல்லுகிறீர்கள்?

கடைக்காரர்:—கடன் வேண்டுமா?

வாங்குபவர்:—நீங்கள் பணத்தைப் பற்றிக் கொஞ்சமும் சந்தேகப்பட வேண்டாம். நான் கொடுக்கவேண்டிய பணத்துக்கு ஈடாக ஒரு ஹார்மோனியத்தை இங்கேயே வைத்துவிட்டுப் போகிறேன்!

★

## அவர் கவலை!

வக்கீல் குமாஸ்தா (கட்சிக்காரரைப் பார்த்து):—ஓய் செட்டியாரே, உம்முடைய கேஸுக்காக நம்ம வக்கீல் ஜல்தியாய் ஆஜராக வேண்டும் என்கிற அவசரத்தில் கச்சேரிக்குத் தலையில் ஒன்றும் இல்லாமல் கிளம்பிவிட்டார், பார்த்தீரா?

செட்டியார்:—தலையிலே ஒன்றும் இல்லாமல் கச்சேரிக்குக் கிளம்பிவிட்டால் அங்கே போய் என்னத்தை ஐயா, பேசப் போகிறார்? என்னுடைய கேஸ் அல்லவா தோற்றுப் போய்விடும்!

★

## துரதிர்ஷ்டம்!

தபால் குமாஸ்தா:— ஐயா, உம்மை எனக்குத் தெரியாது. இந்தப் பத்து ரூபாய் மணியார்டரை நீர் பெற்றுக் கொள்ள வேண்டுமானால் இந்த ஊரில் உமக்குத் தெரிந்தவராய் ஒருவரைச் சாட்சிக் கையெழுத்துப் போடச் சொல்லும்.

மற்றவர்:—அட துரதிர்ஷ்டமே! நான் ஊருக்குப் புதியவன். இந்த ஊரில் ஒரே ஒரு மனிதரைத்தான் எனக்குத் தெரியும்! அவருக்கும் நான் பத்து ரூபாய் கடன் கொடுக்க வேண்டியிருக்கிறதே!

## என்ன தைரியம்!

பிறந்த வீட்டுக்குச் சென்று திரும்பிவந்த தன் மனைவியிடம் கணவன் வீட்டில் திருடன் வந்ததைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தான்.

கணவன்:—நான் அவன் மண்டையை உடைத்திருப்பேன். ஏதோ, அவன் நல்ல காலம், என் கையில் அகப்படாமல் தப்பினான். சத்தம் கேட்டதும் என்ன வேகமாய்ப் போனேன் தெரியுமா? ஒவ்வொரு நடைக்கும் மூன்று படிகளாகத் தாண்டி மாடியிலிருந்து இறங்கினேன்!

மனைவி:—அப்போது திருடன் எங்கேயிருந்தான்?

கணவன்:—ஏன், அவன் மூன்றாவது மாடியில் இருந்தான்!

★

## கெட்டிக்காரன்!

பையன்:—அப்பா, இன்றைக்கு நான் எட்டணா சம்பாதித்தேன்.

அப்பா:—பேஷ்! அப்படித்தான் உன் தேவையை நீ தேடிக்கொள்ள வேண்டும். எப்படிச் சம்பாதித்தாய்?

பையன்:—தம்பியிட மிருந்துதான் அந்த எட்டணாவைச் சம்பாதித்தேன்!

★

## உண்மைதான்!

மாஜிஸ்ட்ரேட் (குற்றவாளியைப் பார்த்து):—நீ திருடவில்லையென்று சாதிப்பதில் பிரயோஜனம் ஒன்றுமில்லை. நீ திருடிய வீட்டுக்காரர் நீதான் திருடினாய் என்று கூறுவதோடு உன் அடையாளங்களையும் சரியாய்ச் சொல்லுகிறாரே!



குற்றவாளி:—அதெப்படி முடியும்? நான் போன அன்றைக்குத்தான் அவர் போர்வையை இழுத்து முகத்தை மூடிக் கொண்டு படுத்திருந்தாரே!




சங்கரலிங்கம் குடியிருந்த தெருவில் அனேகமாக யாரும் கடிகாரம் வைத்துக் கொள்ளவில்லை. அப்படித் தவறிக் கடிகாரம் வைத்திருக்கும் இரண்டொருவரும் அதில் மணி பார்ப்பதில்லை. அதாவது மணி பார்க்கும் அவசியம் அவர்களுக்கு ஏற்படவில்லை. அந்தத் தெருவில் இருந்த ஆபீஸுக்குப் போகும் தகப்பன்மார்கள் தங்கள் பையன்களை யழைத்து, "ஆபீஸுக்கு நாழிகை யாகிவிட்டதா, பாருடா!" என்றால் அவர்கள், "இல்லை, அப்பா! இன்னும் சங்கரலிங்கம் குளிக்கவில்லை. இப்போதுதான் மார்க்கெட்டுக்குப் போனார்!" என்று சொல்லுவார்கள். அவ்வளவு கணக்காக, ஒரு நிமிஷங்கூடப் பிசகாமல் சங்கரலிங்கம் தம் அலுவல்களைக் கவனிப்பார்.

சங்கரலிங்கம் கையில் தடியுடனும், காலில் செருப்புடனும் 'டக் டக்' என்று நடந்தால் உஷக் காலம், மணி ஐந்து என்று நிர்மானமாய்ச் சொல்லலாம். கையில் பையுடன் அவர் தெருவில் காட்சியளித்தால் மார்க்கெட்டுக்குப் போகிறார், மணி ஏழு என்று கொள்ள வேண்டும். சங்கரலிங்கம் மார்க்கெட்டிலிருந்து திரும்பினால் மணி எட்டு. சங்கரலிங்கம் ஸ்நானம் செய்தால் மணி எட்டரை. சங்கரலிங்கம் சாப்பிட்டால் மணி ஒன்பது. சங்கரலிங்கம் வாசலுக்கு வந்து கையலம்பினால் மணி ஒன்பதேகால். சங்கரலிங்கம் 'டக் டக்' என்று பூட்ஸ் ஒலியுடன் சாலையில் நடந்தால் மணி ஒன்பதே முக்கால். மாலை வேளையில் அவர் பூட்ஸ் சத்தம் கேட்டால் மணி ஐந்தரை. இப்படியாக, சங்கரலிங்கம் அந்தத் தெரு ஜனங்களுக்கு, ஏன், அந்த ஊர் ஜனங்களுக்கே ஒரு மணிக்கூண்டு கடிகாரமாக உதவி வந்தார். என்றைக்காவது சங்கரலிங்கத்துக்கு உடல் நலிவு ஏற்பட்டு அன்று அவர் ஆபீஸுக்குப் போகவில்லையென்றால் அந்தத் தெரு ஜனங்களுக்கு ஒரே திண்டாட்டந்தான். எல்லோரும் ஆபீஸுக்கு அன்று 'லேட்'தான்!

பிரதிபலன் எதிர்பாராத சங்கரலிங்கத்தின் நிஷ்காம்யத் தொண்டு அவரைப் பரோபகாரிகளின் கூட்டத்தில் சேர்த்து விட்டது. ஆபீஸிலிருந்து வீட்டுக்குப் போன பின்பும், சங்கரலிங்கம் வெகு நேரம் வேலை செய்வார். ஆபீஸிலும் மணிப்படி வேலை செய்வார்.

சங்கரலிங்கம் ஒரு பிரபல பாங்கியின் வெளியூர்க் கிளை ஆபீஸில் தலைமைக் குமாஸ்தா வேலை பார்த்து வந்தார். அந்தக் கிளை ஆபீஸ் மானேஜர் மேல் பார்வை பார்ப்பதோடு சரி, மற்ற விவகாரங்களை யெல்லாம் சங்கரலிங்கமே கவனித்து வந்தார். பாங்க் விவகாரமே தெரியாத கிராமத்து ஜனங்களோடு சங்கரலிங்கம் தொடர்பு வைத்துக் கொண்டு மிகவும் சிரமப்பட வேண்டி வந்தது. இத்தனை சிரமத்துக்கும் சங்கரலிங்கத்துக்குத் தலைமை ஆபீஸிலிருந்து ஒரு பாராட்டுக் கடிதமோ அல்லது அவரை உற்சாகப்படுத்த அந்தஸ்து உயர்வோ ஒன்றும் கிடைக்கவில்லை. கிளை ஆபீஸ் மானேஜர் சங்கரலிங்கத்தைப் பற்றித் தலைமை ஆபீஸுக்குத் தெரி

வித்தால்தானே தலைமை ஆபீஸ் மானேஜர் அவரைப் பற்றி ஏதாவது தெரிந்து கொள்ள முடியும்?

## 2

சங்கரலிங்கம் எல்லையற்ற பொறுமையுடன் தம் கடமையைச் சரிவரச் செய்து வந்தார். கடமையில் பிறழாத சங்கரலிங்கத்தின் உத்தியோக வாழ்க்கை இப்படியே போய்க் கொண்டிருந்திருக்குமானால், சங்கரலிங்கத்தின் வாழ்க்கை வரலாற்றை எழுத வேண்டிய அவசியமே நேர்ந்திருக்காது. இருந்தாற்போலிருந்து ஒரு கதைக்கு வேண்டிய ருசிகரமான சம்பவங்கள் அவரது வாழ்க்கையில் குறுக்கிட்டன.

சங்கரலிங்கம் ஒருவருடைய ஜோலிக்கும் போகாமலிருந்தாலும் அவரை அவருடைய போதாத காலம் சும்மா இருக்க விடவில்லை.

அன்று தலைமை ஆபீஸ் மானேஜரின் சிந்தனை முழுவதும் சங்கரலிங்கத்தைப் பற்றியதாய்த்தான் இருந்தது. சங்கரலிங்கம் இது விஷயத்தில் நிரபராதி. பின் தலைமை ஆபீஸ் மானேஜரின் சிந்தனையைக் கிளறிய சங்கரலிங்கத்தைப் பற்றிய சமாசாரம் என்ன? அது அப்படி ஒன்றும் பிரமாதமான விஷயம் இல்லை. ஒரு சிறு கடிதம்தான். அது பின் வருமாறு:

ஐயா,

உங்கள் பாங்கியின் கிளை ஆபீஸில் தலைமைக் குமாஸ்தா வேலை பார்த்து வரும் சங்கரலிங்கம் ருத்ராட்சப் பூனை இனத்தைச் சேர்ந்தவர். மேலுக்கு யோக்கியரைப்போல் வேஷம் போடுகிறார். கிராம வாசிகள் உங்கள் பாங்கியை நம்பி அதில் பணம் கட்டுகிறார்கள். ஆனால் சங்கரலிங்கம் சில காலமாக பாங்கிக் கணக்கில் ஏதோ பொய் புரட்டுகளைச் செய்து வருவதாய்த் தெரிகிறது. ஒரு நாள் சங்கரலிங்கம் விபரீதமான காரியம் எதையாவது செய்துவிட்டால் எங்கள் ஊர் வாசிகளின் பணம் போவதோடு நில்லாமல், உங்கள் பாங்கியின் பெயரும் கெட்டுவிடும். எதற்கும் சங்கரலிங்கம் கணக்கு ஒழுங்காக வைத்திருக்கிறாரா என்று நீங்கள் பரிசீலனை செய்தால் நல்லது. முன்னதாகவே எச்சரிக்கை செய்கிறேன்.

.............................."

இந்த அநாமதேயக் கடிதம் மானேஜரின் மூளைக்கு வெகு நேரம் வேலை கொடுத்தது. அவர் பாங்க் ஆடிட்டரை யழைத்து, "ஸார், இந்தக் கடிதத்தைப் பாருங்கள். இந்த மாதிரி மொட்டைக் கடிதங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது என்றாலும், சில சமயங்களில் இது மாதிரி சின்ன விஷயங்களிலிருந்து எவ்வளவோ பெரிய விஷயங்கள் வெளியாகிவிடுகின்றன. நம்ம பாங்கியின் கீழூர் கிளை ஆபீஸைப் பற்றிய கடிதம் இது!" என்று சொல்லி அந்தக் கடிதத்தை ஆடிட்டரிடம் கொடுத்தார்.

அதற்குப் பிறகு கீழூர் பாங்கிக் கட்டிடத்தில் மிகவும் பரபரப்பாக வேலை நடந்து கொண்டிருந்தது. சங்கரலிங்கத்தின் கணக்குப் புஸ்தகங்கள் பக்கம் பக்கமாக வரி வரியாகச் சோதனை யிடப்பட்டன. சங்கரலிங்கத்துக்கு இந்தத் திடீர்ச் சோதனையின் காரணம் கொஞ்சமும் விளங்கவில்லை. நல்ல வேளையாகக் கணக்குப் பரிசோதகர்கள் துருவித் துருவிப் பார்த்தும் கணக்கில் ஒரு தவறும் காணவில்லை. ஆகவே, சங்கரலிங்கத்தைப் பற்றி நல்ல அபிப்பிராயம் எழுதிவிட்டுக் கணக்குப் பரிசோதகர்கள் சென்று விட்டனர்.

அன்று காலையில் மானேஜர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. காரணம், மீண்டும் சங்கரலிங்கத்தைப் பற்றி ஒரு மொட்டைக் கடிதம் வந்தது தான். பாங்க் ஆடிட்டர்களும் இன்ஸ்பெக்டர்களும் வரவழைக்கப்பட்டனர். இந்தத் தடவை இரண்டு மூன்று பேராகச் சேர்ந்து கீழூர் பாங்க் கணக்குப் புஸ்தகங்களைப் பரிசோதித்தனர். என்ன ஆச்சரியம்! கணக்கில் ஒரு தவறும் காணவில்லை. இந்தத் தடவையும் நல்ல அபிப்பிராயமே அவர்கள் எழுதிவிட்டுச் சென்றனர். மானேஜர் மனதும் திருப்தி யடைந்தது. அவரும் கவலையற்றுத் தம் அலுவலைக் கவனித்தார்.

## 3

அன்று பாங்க் திறந்த சற்று நேரத்துக்கெல்லாம் ஆபீஸ் பையன் மானேஜர் அறையில் நுழைந்து, "கீழூர் பிராஞ்ச் ஆபீஸிலிருந்து ஹெட் கிளார்க் சங்கரலிங்கம் வந்திருக்கிறார்" என்று சொன்னான்.



"வரச் சொல்!" என்றார்.

சங்கரலிங்கம் வணக்கத்துடன் உள்ளே நுழைந்து மானேஜர் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தார்.

மானேஜர் அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்த்ததும், கொஞ்சம் திடுக்கிட்டார். "ஏன் வேலையை ராஜிநாமாச் செய்கிறீர்? உமக்கு நல்ல அந்தஸ்து

கொடுக்க வேண்டும் என்று நாங்கள் தீர்மானித்திருக்கிறோமே! உங்களது உண்மைக்கும் நேர்மைக்கும்......!" என்று ஏதோ சொல்ல ஆரம்பிக்கும் போதே, சங்கரலிங்கம் அவரை இடைமறித்து, "போதும், ஸார்! எனக்கு இந்த உத்தியோகமே வேண்டாம். இரண்டு தடவை கணக்குகளைப் பரிசீலனை செய்ய இங்கிருந்து ஆடிட்டர்களை அனுப்பி விட்டீர்கள். கிராம ஜனங்கள் என்னை ரொம்பக் கேவலமாக மதிக்கிறார்கள். என்னைப் பற்றிப் பலவிதமாகப் பேசிக் கொள்கிறார்கள். ஆகையால் தயவு செய்து எனக்கு விடுதலை அளியுங்கள்!" என்று நாத் தழுதழுக்கக் கூறினார். நீர் மல்கும் அவர் கண்கள் இந்தச் சோகக் காட்சியை மேலும் பரிதாபமாக்கின.

மானேஜர் ஒரு நிமிஷம் தத்தளித்துப் போய் விட்டார்.

"மிஸ்டர் சங்கரலிங்கம், கவலைப்படாதீர்கள்! ஹெட் பிராஞ்ச் ஆபீஸின் மானேஜர் இனிமேல் நீர் தான். இனிமேல் உங்களுக்கு ஆக்ஷேபம் ஒன்றுமில்லையே!" என்றார் மானேஜர்.

சங்கரலிங்கம் சந்தோஷத்தினால் வாயடைத்துப் போய் நின்றார்.

• • •

"எதிர்பாராத விதமாக உங்களுக்குக் கிடைத்த இந்தப் பிரமோஷனுக்குக் கடவுளையோ உங்கள் தலைமை ஆபீஸ் மானேஜரையோ வாழ்த்திப் பிரயோஜனமில்லை. உண்மையாக வாழ்த்த வேண்டியது என்னைத்தான். நான் இராப் பகல் கண் விழித்து உங்களைப் பற்றி அந்த அநாமதேயக் கடிதங்களை எழுதாவிட்டால் உங்களை அந்த மானேஜர் சீந்துவாரா, என்ன? அப்பப்பா! என்ன கஷ்டப்பட்டு எழுதினேன் தெரியுமா?" என்று சங்கரலிங்கத்தின் சகதர்மிணி மூச்சு விடாமல் பேசினாள்.

சங்கரலிங்கத்துக்கு ஆச்சரியத்தினால் மூச்சு நின்றுவிடும் போல் இருந்தது. பிரமை பிடித்தவர் மாதிரி ஒன்றும் தோன்றாமல் உணர்வற்று நின்றார்.

மறு நாள் காலை அவருக்கு மானேஜர் வேலை பார்க்க உத்தரவு வந்து விட்டது. இதில் ஏமாற்றமடைந்தது அந்த ஊர் ஜனங்கள்தான். இனிமேல் சங்கரலிங்கத்தின் பூட்ஸ் சத்தத்தையும் செருப்புச் சத்தத்தையும் வைத்துக் கொண்டு அவர்கள் மணி தெரிந்துகொள்ள முடியாதல்லவா? ஏனெனில், அவர்தான் இப்போது 'ஜம்'மென்று காரில் போகிறாரே!




பி. எஸ். மணி

காலை எட்டு மணி இருக்கும். பி. ஏ. பரீக்ஷைக்குப் பத்து நாட்களே யிருந்தபடியால் 'ஷேக்ஸ்பிய'ரை அப்படியே கரைத்துக் குடித்துக் கொண்டிருந்தேன்.

கதவைப் பலமாக யாரோ தட்டினார்கள். எனக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கி வந்தது. "யார் அது?" என்று கேட்டேன்.

"நான்தான்! கதவைத் திற!"

"நான்தானென்றால் யார்?" என்று கேட்டுக் கொண்டே கதவைத் திறந்தேன்.

என்ன ஆச்சரியம்! எனது நண்பன் சோமு நின்று கொண்டிருந்தான். சோமுவும் நானும் முதல் பாரத்திலே யிருந்து சேர்ந்து படித்தவர்கள்.

ஆனால் எங்களிருவருக்கும் ஒரே ஒரு வித்தியாசம். நான் வகுப்பில் பேசாமல் வாத்தியார் கூறுவதை ரொம்பக் கவனமாகக் கேட்பேன். சோமுவோ எந்த வாத்தியாரைக் கேலி பண்ணலாம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பான்.

ஒருநாள் ஆங்கில வாத்தியார் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அன்று ஏதோ பிசகாக ஓர் ஆங்கில வார்த்தையைக் கூறிவிட்டார். அவ்வளவுதான்; எல்லோரும் பேசாமலிருக்க, சோமு மாத்திரம் எழுந்திருந்து அந்தத் தவறை எடுத்துக் கூறிவிட்டு, 'கொல்' லென்று சிரித்துவிட்டான். வாத்தியாருக்குக் கோபமும் அவமானமும் தாங்கவில்லை. உடனே அவர் அவனை அன்று முழுவதும் பெஞ்சின்மேல் ஏற்றி வைத்து விட்டார். அதோடு விட்டாரா? செலக்ஷன் பரீக்ஷை நடந்து அதன் முடிவு வந்தது. சோமுவின் பெயர் சிவப்பு மையினால் அடிபட்டிருந்தது. பாவம்! அவன் இந்தமாதிரி வரும் என்று கனவிலும் கருதவில்லை.

மறுநாள் சோமு என்னிடம் வந்து, "என்றாவது ஒருநாள் இந்த அழுமூஞ்சி அண்ணாசாமியை ஒரு கை பார்க்காவிட்டால் நான் சோமு இல்லை" என்று வீராப்புடன் கூறிவிட்டுச் சென்றான். அப்புறம் நாலு வருஷங்கள் வரையில் அவன் முகதரிசனம் கிடைக்கவில்லை. அதற்குப் பிறகு இன்று தான் நான் முதன் முதலாக அவனைப் பார்த்தேன்.

"என்ன சோமு! அத்தி பூத்தமாதிரி யிருக்கிறதே, உன் வரவு?" என்றேன்.

"ஆமாம். இன்றுதான் பம்பாயிலிருந்து வந்தேன்" என்றான் அவன்.

"ரொம்ப சந்தோஷம்; பம்பாயிலே என்ன வேலை பார்க்கிறாய்?"

"'போர்ட் மோட்டார் கம்பெனி'யில் போர்மெனாக யிருக்கிறேன். ஐந்நூறு ரூபாய் சம்பளம். அது சரி, ஊரிலே என்ன விசேஷம்?" என்று கேட்டான் சோமு.

"பாவம், அழுமூஞ்சி அண்ணாசாமி வாத்தியார் டைபாய்டு ஜுரத்தில் கிடந்து ஒரு மாதம் அவஸ்தைப் பட்டார். ஒரு வழியாகப் பிழைத்து விட்டார். ஆனால் ரொம்ப இளைத்துப் போய்விட்டார். ஒரு மாதமாகப் பள்ளிக்கூடத்துக்கு வரவே யில்லையாம்" என்றேன்.

"ஐயோ பாவம்! அப்படியா சமாசாரம்? நான் அவரைப் பார்க்க வேண்டும்!" என்று அநுதாபத்துடன் சொன்னான் சோமு.

"என்னப்பா, வாத்தியாரிடம் திடீரென்று உனக்கு அநுதாபம் பிறந்துவிட்டது?"

"ஆம், தப்பொழுது நான் அவரை வையத் தான் செய்தேன். அது என்னுடைய முட்டாள்தனம். அவர் அந்தமாதிரி என்னை செலக்ஷனில் நிறுத்தியிராவிட்டாலே நான் பம்பாய் போய்ச் சேர்ந்து அங்கு ஒரு கம்பெனியில் வேலை தேடச் சேர்ந்து இவ்வளவு பெரிய சம்பளம் வாங்க முடிந்தது? இல்லாவிட்டால் உன் மாதிரி பி. ஏ. பரீக்ஷைக்கு 'உரு' தட்டிக் கொண்டு இருக்க வேண்டியதுதான். அப்புறம் பி. ஏ. பாஸ் பண்ணிவிட்டு நாற்பத்தைந்து ரூபாய் சம்பளத்துக்குக்கூட பல இடங்களுக்குக் காவடி எடுக்க வேண்டியதுதான்! அதிலிருந்து காப்பாற்றியவர் அண்ணாசாமி ஐயர்தானே? சரி, மணி! நான் போய்விட்டு அப்புறம் வரேன்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டான்.

நான் மறுபடியும் ஷேக்ஸ்பியர் புத்தகத்தைப் புரட்ட ஆரம்பித்தேன். படிக்க ஓடவேயில்லை. அவன் கடைசியில் சொல்லி விட்டுச் சென்ற வார்த்தைகள் என் காதில் ஒலித்துக் கொண்டே யிருந்தன.




“ சீனு ”

‘கீச், கீச்’ என்று கத்திக்கொண்டே பரபரப்புடன் வளையில் நுழைந்த குஞ்சு எலியைத் தாய் எலி நிறுத்தி, “நான்தான் உன்னை வெளியே எங்கும் தலை காட்டக் கூடாது என்று எச்சரித்திருந்தேனே. கேட்டாயா? எனக்குத் தெரியும், ‘என்றைக்காவது ஒரு நாள் நீ ஆபத்தில் மாட்டிக் கொள்வாய்’ என்று. ஏன், என்ன விஷயம்? பூனை, கீரி ஏதாவது உன்னைத் துரத்திக்கொண்டு வந்ததா?” என்று கேட்டது.

குஞ்சு எலி சிரித்துக்கொண்டே, “அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் காண நேர்ந்த ஓர் அதிசயமான அனுபவத்தைப் பற்றி உங்களுக்கெல்லாம் சொல்வதற்காகவே இப்படி மூச்சு வாங்க ஓடி வந்தேன். அதற்குள் நீங்கள் என்னவெல்லாமோ முடிவு கட்டி விட்டீர்களே! சரி, அது இருக்கட்டும்; நான் இன்று கண்ட அதிசயம், அடடா! அம்மாதிரி அனுபவம் உங்கள் ஆயுட் காலத்தில் உங்களுக்குக் கிட்டியிருக்கவே இருக்காது!” என்று மூச்சு விடாமல் பேசிக்கொண்டே சென்றது குஞ்சு எலி.

அப்பொழுது தாய் எலி இடைமறித்து, “சரி, சரி; சுற்றி வளைக்காமல் விஷயத்தைச் சீக்கிரம் சொல்லு! என்ன, அப்படிப்பட்ட அதிசயங்களை நீ கண்டுவிட்டாய்? சொல், கேட்போம்” என்று துரிதப்படுத்தியது.

குஞ்சு எலி தொண்டையைக் கனைத்து விட்டுக்கொண்டு ஆரம்பித்தது. “அடடா! என்ன சொல்வேன், போங்கள்! நான் விடியற்காலம் இங்கிருந்து கிளம்பினேனல்லவா? சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே வளையை விட்டு வெளியேறி, ஒரு ஓரமாக நகர்ந்து போய்த் தோட்டத்துப் பக்கம் சென்றேன். கொஞ்ச தூரம்தான் சென்றிருப்பேன், பூதம்போல் வழியை அடைத்துக்கொண்டு ஏதோ ஒரு பிரம்மாண்டமான வஸ்து நிற்பதைக் கண்டேன். எனக்கு முதலில் திகில் பிடித்துக்கொண்டது. சற்றுப் பின் வாங்கினேன். வெகு நேரம் அது அசையாமல் நிற்கவே, கொஞ்சம் தைரியமடைந்து மெதுவாகச் சென்றேன். லேசாக ஒரு பக்கத்தைத் தொட்டுப் பார்த்தேன். அது ஏதோ சுவர் போல் தோன்றவே, அது ஒரு வீடாயிருக்க வேண்டும் எனத் தீர்மானித்தேன். அந்த வீட்டிற்குள் புகுந்து பார்க்க

வேண்டும் என்று எண்ணம் உண்டாயிற்று. அதன் மீது மெதுவாகத் தாவினேன். என் கண்ணில் ஒரு துவாரம் தென்பட்டது. அதற்குள் புகுந்து உள்ளே குதித்து விட்டேன். குதித்தால், அடடா! நான் என்னத்தைச் சொல்ல? எனக்கு மூச்சே நின்று விடும்போலிருந்தது. அங்கு நான் கண்ட தின்பண்டங்கள்தான் எத்தனை! அவைகளில்தான் எத்தனை ரகம்! என்ன வர்ணங்கள்! பங்களா, மாளிகை என்றெல்லாம் நீங்கள் பேசிக் கொள்வீர்களே, அப்படிப்பட்ட இடமாய்த்தான் அது இருக்க வேண்டும். காய் கறி வகைகள் அங்கு போர் போராய்க் கிடந்தன. கீரைகள், பழ வகைகள் மலை மலையாய்க் குவிந்து கிடந்தன. இதைத் தவிர இன்னும் என்னவெல்லாமோ இருந்தன. அப்புறம் சீப்புத் துணுக்குகள் என்ன, சோப்புகள் என்ன, கண்ணாடித் துண்டுகள் என்ன, நானாவிதமான பொம்மைகள் என்ன—இன்னும் எத்தனை யெத்தனையோ வஸ்துக்கள் அங்கே இறைந்து கிடந்தன. எதைத் தொடுவது, எதைச் சாப்பிடுவது என்று எனக்குத் தோன்றவில்லை. கடைசியில் குவிந்து கிடந்த வித விதமான பண்டங்கள் ஒவ்வொன்றிலும் கொஞ்சங் கொஞ்சம் ருசி பார்த்ததிலேயே என் வயிறு முட்டிப் போய்விட்டது" என்று சொல்லி, மூச்சுவிடும் பொருட்டுக் குஞ்சு எலி பேச்சை நிறுத்தியது.

"சரி, அப்புறம் என்ன நடந்தது? சீக்கிரம் சொல்லேன்!" என்று துரிதப் படுத்தின மற்ற எலிகள்.

"அப்புறம் என்ன நடந்தது தெரியுமா? கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அருகில் ஏதோ சத்தம் கேட்டது. 'கட கடா, கட கடா' என்று அந்தச் சத்தம் நெருங்கி வரவே எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. அடுத்த நிமிஷம் அந்தச் சத்தம் திடீரென்று நின்றது. அதே சமயத்தில் அந்த வீடு லேசாக ஆடியது. பிறகு பலமாக ஆடத் தொடங்கியது. யாரோ அதை அப்படியே பெயர்த்தெடுத்திருக்க வேண்டும். அவ்வளவுதான்; என்னைக் கிலி பிடித்துக் கொண்டது. அதற்குப் பிறகும் அங்கே தங்குவதற்கு எனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? ஒரே தாவாகத் தாவினேன்; வெளியே வந்து விழுந்தேன்; நேரே இங்கு ஓடிவந்தேன்! அதற்கப்புறம் அங்கே என்ன நடந்ததோ, எனக்குத் தெரியாது!" என்று கூறி முடித்தது சுண்டெலி.

இதுவரையில் பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த தாய் எலி விழுந்து விழுந்து சிரித்தது. "இப்படியும் ஒரு அசடு உலகத்தில் உண்டா?" என்று கூறி விட்டு மறுபடியும் 'இடி, இடி' என்று சிரித்தது.

"அட, பைத்தியமே! இவ்வளவு நேரமும் நீ ஒரேயடியாக வர்ணித்த வஸ்து வெகு அற்பமானதுதான்! அது என்ன தெரியுமா? அதுதான் குப்பைத் தொட்டி! மனிதர்களுக்கு, அவர்கள் வீட்டில் நாம் ஏதாவது தின்றுவிட்டால்தான் வந்து விடும் கோபம்! அதற்காகவே அநேகர் வீட்டில் பூனை வளர்க்கிறார்கள். ஆனால் அவர்களாக எத்தனையோ தின்பண்டங்களை வீணாக்குவார்கள். அப்படி வீணாய்ப் போன பொருள்களையும், உபயோகமில்லாத பண்டங்களையெல்லாம் கொண்டு வந்து குப்பைத் தொட்டியில் தள்ளி நிரப்பி விடுகிறார்கள். இது தெரியாமல்தான் நீ அதை ஏதோ 'சுவர்க்க லோகம்' என்று எண்ணிக் கொண்டு விட்டாய். இதைப் போல் இன்னும் அநேகக் குப்பைத் தொட்டிகள் இருக்கின்றன. அதில் குவிந்து கிடந்த குப்பையை அள்ளி ஏற்றிச் செல்லும் பொருட்டு வந்த வண்டிதான் உன்னைப் பயமுறுத்தி யிருக்கிறது!" என்று தாய் எலி விஷயத்தை விளக்கி வைத்தது.

"பூ, இவ்வளவுதானா!" என்று கூவின ஏக காலத்தில் மற்றச் சுண்டெலிகள் எல்லாம். உலகத்தைச் சுற்றி வந்த குஞ்சு எலியும் தன் அசட்டுத் தனத்தை யெண்ணிச் சிரித்தது. பிறகு அந்தக் குஞ்சு எலி வாயைத் திறக்குமா, என்ன?



புதிய 40 B. H. P. "பௌலர்" வெர்டிகல் 1100 R. P. M. டீஸல் ஆயில் என்ஜின்களும், S. L. 3" கிர்லோஸ்கர் பம்புகளும், இங்கிலீஷ் 8 H. P. மோட்டாருடன் இணைக்கப்பட்டுள்ள 4"×3" பம்பு செட்டுகளும் தற்சமயம் கைவசமுள்ளன.



விபரங்களுக்கு:

## ஸாம்ஸன் & கோ.

என்ஜின், எலக்ட்ரிக் மோட்டார், பம்புஸெட் வியாபாரிகள்

8/22, பிராட்வே, மதராஸ்

---



சுலபமாக எழுதுங்கள்

எவ்விதமாக எழுதினாலும் சுலபமாக எழுதுவது என்பது சேர்ந்தி வாய்ந்த மெண்ட்மோர் ஆடோ-ப்ளோ பேனாவின் முக்கிய அம்சங்களில் ஒன்று. இந்திய சீதோஷ்ண நிலைக்காகவே செய்யப்பட்ட அதன் பாகங்கள் இதை நன்கு நிரூபிக்கின்றன. இத்துடன் ட்ராப் பில்லிங், லீவர் பில்லிங், ஸ்லாட் பில்லிங் ஆகிய மாடல்களில் ஆஸ்மி இரிடியம் தோய்க்கப்பட்ட முனைகளுடன் கூடிய 14 காரட் தங்க நிப்புடன் கூடியது. பெருமைபடக் கூடிய பேனாவிற்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?

விலை ரூ. 15/-

**MENTMORE**
*Auto-Flow*

மெண்ட்மோர்
ஆடோ-ப்ளோ
இங்கிலாந்தில் செய்யப்பட்டது

வர்த்தக விசாரணைகளுக்கு முழு உரிமை பெற்ற விநியோகஸ்தர்கள்:
முலர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்., 15, கந்தராம செட்டித் தெரு, மதராஸ்

விற்பனைக்குப் பிறகும் எங்கள் சேவை!




# சித்ரமும் செல்வமும்

கி. ரா. கோபாலன்

அப்பொழுது தான் ஆற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு கரை ஏறினாள் புதுப்பண்ணை கோவிந்தனின் மனைவி கனகம். அவளுக்கு எதிரில் தண்ணீர் எடுப்பதற்காக ஒரு மண் குடத்தைச் சுமந்துகொண்டு ஞானம் வந்தாள். ஞானத்தைக் கண்டதும் கனகத்தின் நடையில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. கழுத்தை ஒரு வெட்டு வெட்டி, இடையை ஒரு குலுக்குக் குலுக்கி நடக்க ஆரம்பித்தாள். ஞானம் அவளைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே ஆற்றில் இறங்கினாள். படித்துறைக் கல்லில் புடவை துவைத்துக்கொண்டிருந்த செக்கமலம் ஞானத்தைக் கண்டதும் ஏளனமாகச் சிரித்துக்கொண்டே "பார்த்தாயா ஞானம்? அவளுக்குத்தான் என்ன குலுக்கு, என்ன மினுக்குன்னு!" என்றாள்.

ஞானம் இடித்த மனதோடு 'ஹூம்' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே "என்னதான் இருக்கட்டும் அக்கா, 'பணம் பந்தியிலே, குணம் குப்பையிலே'ன்னு பெரியவர்கள் சொல்லுகிற வசனம் வீணாகிவிடுமா?" என்றாள்.

செக்கமலம் பேச்சில் விட்டுக் கொடுக்கிறவள் இல்லை. புடவையைப் பிழிந்து கல்லில் வைத்துவிட்டு "பணத்தைக் கொண்டு போய்க் குப்பையில் போடு. பணம் யாருக்குக் கிடைக்காது? குணந்தான் வேணும். நகை நட்டு, குலுக்கு மினுக்கெல்லாம் இருக்கட்டும். 'கை நிறைஞ்ச பொருளைவிட கண் நிறைஞ்ச புருஷன்' தான் வேணும். ஆயிரந்தான் உடம்பிலே நகையை அள்ளிப் போட்டுக் கொண்டு மினுக்கி நடந்தாலும் முகத்திலே ஒரு சோபிதம் வேண்டாமா?" என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லி விட்டு நிறுத்தினாள்.

செக்கமலத்தின் வார்த்தை, ஞானத்துக்குச் சட்டென்று ஒப்புக்கொள்ளக் கூடியதாய் இல்லை. "அக்கா, ஆயிரந்தான் சொல்லு. ஒரு பெண்ணாப் பிறந்தப்புறம் 'ஒரு நகையைப் பூட்டிக்குவோமா; ஒரு நல்ல சேலையைக் கட்டுவோமா'ன்னு மனம் அடிச்சுக்கத்தான் அடிச்சுக்கும். 'சின்னக் கருப்பன் மகள் அழகு அழகுன்னு'தான் என்னை ஊரிலே சொல்லுவாங்க. என்ன அழகு இருந்தால் என்ன அக்கா? இப்படி



ஒரு ஏழைக் குடியிலே வாழ்க்கைப்பட்டால் எப்போது சுகம் காண முடியும்? ஒரு நகை நட்டைப் பூட்டிக்கொண்டு நல்ல சேலையைக் கட்டிக்கொண்டு நடந்தாத்தான் ஊருக்கு மதிப்பா இருக்கும்" என்றாள் குறை அடங்கா மனதோடு.

"அவள் செய்கிற ஏளனம் நம்மை என்ன செய்துவிடும்? நிறைகுடமா இருந்தா தளும்பாது. அது குறை குடந்தானே? இதை யெல்லாம் நினைச்சு மனசு நொந்துக்கக் கூடாது. உன்னை அவள் ஏளனம் செய்ய என்ன இருக்குது? உன்னைப்போல அழகா இருக்கிறாளா? இல்லே, உன் புருஷனைப் போல குணமான லட்சணமான புருஷனைப் படைச்சிட்டானா? புதுப் பணக்காரனுக்கு வாழ்க்கைப்பட்டு உடம்பிலே நாலு நகையை அள்ளிப் போட்டுக் கொண்டு, செப்புக் குடத்தை எடுத்துக்கிட்டு குலுக்கி மினுக்கி ஆத்தங் கரைக்கு வந்துவிட்டால் அவளை நாம் ராஜா வீட்டு மகள் என்று நினைத்து விடப் போகிறோமா? ஞானம், ஞானம், இதெல்லாம் நிலைக்காது. அதை உன் கண்ணாலேயே பார்க்கலாம்......" என்று ஏதோ சபதமிட்டுச் சொல்லுகிறவள் போல் சொல்லி நிறுத்தினாள் செங்கமலம்.

ஞானத்திற்கு இந்த வார்த்தைகள் எவ்வித மான மன ஆறுதலையும் உண்டாக்கி விடவில்லை. யௌவன வயதிலேயே குடும்ப பாரத்தை ஏற்றுக் கஷ்ட நஷ்டங்களை அனுபவித்து அலுப்படைந்த அவளுக்குச் செங்கமலத்தின் வார்த்தைகள் வெறும் வரட்டுத் தத்துவமாகத்தான் பட்டன. அவள் ஒன்றும் பதில் பேசாமல் தான் கொண்டு வந்திருந்த மண் பானையைக் கழுவி, தண்ணீர் எடுத்துக் கொண்டு கரையேறினாள்.

புதுப் பணக்கார கோவிந்தனின் மனைவி கனகம் அவ்வளவு அழகியல்ல. பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவளுமல்ல. அவள் கோவிந்தனுக்கு வாழ்க்கைப் பட்டது ஒரு பெரிய அதிர்ஷ்டம் என்றும் சொல்லிவிட முடியாது. ஏனென்றால் கோவிந்தனுக்கு அவளைத் தவிர வேறு பெண் யாரும் கிடைப்பது மிகவும் அரிதா யிருந்தது. அவனுக்குக் கொஞ்சம் அதிர்ஷ்டம் இருந்ததால்தான் கனகமாவது கிடைத் தாள் என்று சொல்லலாம். கனகம் கருப்பு. அவளிடம் யாராவது சிறிது அழகைக் கண்டு ரசித்திருந்தால் அது அவள் கணவன் கோவிந்தனாகத்தானிருக்க வேண்டும். ஏழ்மைக் குடியில் பிறந்து வளர்ந்த கனகத்திற்குப் பணக்காரக் குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டவுடன் கர்வம் தலைதூக்கி யாடியது.

ஞானத்துக்குக் கனகத்தைக் கண்டாலே பிடிக்காது. முக்கியமாக இவ்வளவு அவலட்சணம் பொருந்திய கனகத்திற்குக் கடவுள் இவ்வளவு நகைகள் பூட்டிக் கொள்ளும் அதிர்ஷ்டத்தைக் கொடுத்தாரே என்று எண்ணும் போதுதான் அவள் இருதயம் வெடித்து விடும்போ லிருக்கும். ஞானம் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவளா யினும் நல்ல அழகி. அவள் செய்த பாக்கியமோ துர்ப்பாக்கியமோ ஏழைக் குடியில் வாழ்க்கைப்படும்படியாகி விட்டது. அவளுடைய கணவன் அருணாசலம் ஏழை என்பதைத் தவிர ஒழுங்கான நடத்தையும் நல்ல குணமும் பொருந்தியவன். ஞானத்திடம் அவனுக்கு அளவற்ற அன்பு. என்ன இருந்தாலென்ன? கடவுளின் சோதனை கடுமையாகவே இருந்தது. சதா கஷ்டத்திற்குள்ளாகி வரும் குடும்பம். அடிக்கடி குடும்பத்திற்கு ஏற்படும் கஷ்டத்திற்கு ஈடு கொடுக்க அவளுடைய ஆபரணங்கள் ஒவ்வொன்றாக உபயோகப்பட்டன. கல்யாணமானவுடன் எவ்வளவோ சுகங்களை அனுபவிக்கப் போகிறோம் என்று கனவு கண்டு கொண்டிருந்த ஞானத்துக்குக் குடும்பத்தை ஏற்று நடத்தும்போது கண்ட கடன் தொல்லையும், எதிர்பாராத செலவுகளும் கஷ்டத்தையும் பெருத்த ஏமாற்றத்தையும் தான் கொடுத்தன. அவளுக்கு எவ்வளவோ ஆசைகள். அவளுடைய அழகான உடம்பில் விதவிதமான ஆபரணங்களை அணிந்து அலங்கரித்துக் கொள்ள வேண்டுமென்று போட்ட திட்டங்க ளெல்லாம் வீணாயின. அவள் நாளுக்கு நாள் மனமொடிந்து

போனாள். ஆனால் அவள் மனதிற்கு திம்மதி யளிக்கக் கூடியதா யிருந்தது அவள் கணவன் அருணாசலத்தின் இனிய முகமும் வேடிக்கையான பேச்சு இன்பமும்தான்.

ஆற்றங்கரையிலிருந்து வரும்பொழுதே அவள் சிந்தனை எங்கெங்கோ ஓடியது. 'தன்னைவிட அழகில் குறைந்த, என்-அவலட்சணமாகத் திகழும் கனகத்திற்கு இவ்வளவு சலுகைகளையும் பெருமையையும் கொடுத்து தன்னை ஏன் இவ்வளவு அழகாகப் படைத்துப் பழிவாங்குவது போல் வஞ்சிக்க வேண்டும்' என்று கடவுளை வைது கொண்டாள்.

இப்படியே சிந்தனை ஓட்டத்திலே அவள் தன் வீட்டு வாசற்படியை அடைந்து விட்டாள். வீட்டுக்கு வெளியே இரண்டு இளைத்த உழவு மாடுகள் படுத்திருந்தன. அவை ஒன்றையொன்று பார்த்து, 'இன் எத்தனை நாட்கள் இப்படிப் பாடுபடக் கடவுள் நம்மை விதித்திருக்கிறாரோ?' என்று கேட்பதுபோல் இருந்தன. வீட்டின் ஒரு பக்கத்துச் சுவர் சரிந்து பாளமிட்டு வெடித்து அடுத்த மழையைப் பயங்கரத்துடன் எதிர் நோக்குவது போலிருந்தது. இதற்கெல்லாம் எப்பொழுது விமோசனம் பிறக்கப் போகிறதோ என்று அவள் பெருமூச்சு விட்டாள். வீட்டின் இடிந்த சுவரையும், இளைத்துப் போய்க் கிழடுதட்டி உழவுக்குப் பயன்படாது உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கும் இரண்டு மாட்டையும் பார்த்தவுடன் கனவு, அலங்காரம் இவைகள் மீதெல்லாம் வைத்திருந்த ஆசையை மறந்து குடும்பத்தையும் வீட்டையும் சீராக்க வேண்டுமே என்று எண்ணி ஏங்கினாள்.

## 2

கோவிந்தன் 'புதுப்பண்ணை கோவிந்த'னாகி வருடம் ஐந்தாறு தானிருக்கும். அதற்கு முன்னால் கிராமத்தில் எல்லாரையும் போலக் குத்தகை நிலத்தில் உழுது பயிர் செய்யும் சாதாரண கோவிந்தப் படையாச்சியாய்த் தானிருந்தான். எதிர்பாராத விதமாக அவனை நாடி வந்த அதிருஷ்டம் அவனை ஒரு பண்ணைக்கு எஜமானனாக்கி விட்டது. கோவிந்தனுக்குச் சிற்றப்பன் ஒருவன் சிங்கப்பூரில் இருந்தான். அவனைப் பற்றி நினைத்தே கிடையாது கோவிந்தன். ஆனால் எதிர் பாராதவிதமாக அவனுடைய சிற்றப்பன் பதினாயிர ரூபாய் பணத்தோடு கோவிந்தன் வீட்டைத் தேடி வந்து தன் கடைசி மூச்சையும் அவன் வீட்டிலேயே விட்டான். இறந்துபோன சிற்றப்பனுடைய பணத்திற்கு வெகு சுலபமாக பாத்தியமுடையவனாகி விட்டான் கோவிந்தன். கையில் பணப் புழக்கம் ஏற்பட்டதும் புறம் போக்காய்க் கிடந்த நிலத்தை யெல்லாம் கிரயத்திற்கு வாங்கி ஊரில் ஒரு பண்ணைக்கு எஜமானன் என்ற பெயரும் வாங்கிவிட்டான். ஊரில் இரண்டொரு பண்ணை முதலாளிகள் நடப்பது போலத் தானும் ஆடம்பரமாகவும் அதிகாரத்துடனும் வாழ நினைத்தான். பணம் வந்தவுடனே வீண் படாடோபமும் கர்வமும் அவனை அண்டி வந்து அடைந்தது.

ஊரில் யாரைக் கண்டாலும் அவனுக்கு அலட்சியமாகத்தான் இருக்கும். பெரிய பண்ணை மூப்பனருக்கு எல்லோரும் மரியாதை செய்வதுபோல் தனக்கும் எல்லோரும் செய்ய வேண்டுமென்று எண்ணினான். பெரிய பண்ணை மூப்பனார், தன்னையும் அவருக்குச் சமமான முதலாளியாக நினைக்க வேண்டுமென்பதற்காக ஒவ்வொரு காரியத்திலும் அவரைப் போல் நடக்க ஆரம்பித்தான். இரட்டை மாட்டு வண்டி, வெள்ளி வெற்றிலை பாக்குப் பெட்டி, அதைப் பின்னால் சுமந்து வர ஒரு கையாள். முறுக்கு மீசை; கைப்பிரப்பு, மோதிரம், ஜவ்வாதுப் பொட்டு, ஜரிகை வேஷ்டி,—ஒன்றிலும் குறைவில்லாதுதான் இருந்தான். ஆனால் ஊரில் பெரிய பண்ணை மூப்பனாரை மதிக்கும் அளவுக்கு தன்னை யாரும் மதிக்காதது அவனுக்கு ஆத்திரத்தையும் கோபத்தையும் உண்டாக்கியது.

கோவிந்தன் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்துத் தன் மதிப்பிற்குத் தகுந்த இடமாகப் பார்த்துப் பெண் கொள்ள வேண்டுமென்று நினைத்தான். அவன் ஒரு பண்ணைக்கு எஜ



# அட, பகவானே!



எதிரே வரும் ஆளைக் கண்டு எடை பார்க்கும் மெஷின் பயந்து நடுங்குகிறது!

மானன். அதைப்போல் தனக்கு மனைவியாக வருகிறவளும் ஒரு பெரிய பண்ணை எஜமானனின் மகளாக இருக்க வேண்டுமென்பது அவன் ஆசை.

கோவிந்தன் தன் கிராமத்திற்குப் பக்கத்திலுள்ள பல பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்களையெல்லாம் விவாகம் செய்து கொள்ள முயற்சித்துத் தோல்வி யடைந்தான். பிறகு உள்ளூரில் சாதாரணக் குடும்பத்திலேயே அழகுள்ள பெண்ணாய் ஒருத்தியைப் பார்த்து விவாகம் செய்து கொள்ளலாம் என்று முடிவுக்கு வந்தான். இந்த அபிப்பிராயம் தோன்றிய போது அவன் மனக் கண்ணில் முதன்முதல் தோன்றியவள் சின்னக் கருப்பன் பெண் ஞானத்தின் அழகிய உருவம் தான். அந்தக் கிராமத்திலேயே அவள் தான் நல்ல அழகுள்ளவள். அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவனுக்கு வெகு நாட்களாகவே ஆசை. ஆனால் அவன் ஒரு பண்ணைக்கு எஜமானனாகி விட்ட பிறகு இந்த ஆசை கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து விட்டது. பெரிய இடத்துப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பில், பெரிய இடத்திலிருந்து முதலில் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்ட பின், ஆசைக்காகவும் அழகிற்காகவும் வேண்டுமானால் ஞானத்தை இரண்டாவது தாரமாகக் கொள்ள நினைத்தான். இதற்கு முக்கியக் காரணம் பெரிய பண்ணை ஆட்பனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தது தான். அவனைப் போல் தனக்கும் இரண்டு மனைவிகள் இருந்தால் தான் பண்ணை எஜமான் என்று சொல்லிக் கொள்ளப் பூரண லக்ஷணமும் பொருந்தி யிருக்கும் என்று கருதினான். பெரிய இடங்களில் பெண் கிடைக்காது போகவே அவன் முதலில் ஞானத்தைக் கல்யாணம் செய்துகொண்டு பிறகு எப்படியாவது முயற்சித்து ஒரு பெரிய இடத்துப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தான். ஞானத்தைக் கல்யாணம் செய்து கொள்ளுவது அவனுக்கு அவ்வளவு சிரமமானதாகப் படவில்லை. அவள் ஏழைச் சின்னக் கருப்பன் மகள் தானே? அவனுடைய மகளைத் தன்னைப் போல் ஒரு பணக்காரன் கல்யாணம் செய்து கொள்வதென்றால் சாதாரணமான காரியமா? தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தவுடன் சின்னக் கருப்பன் ஆனந்தத்தோடு இணங்கிவிடுவான் என்றுதான் நினைத்தான் கோவிந்தன்.

சின்னக் கருப்பன் வயலில் உழுது கொண்டிருந்தான். சாலையில் இரட்டை மாட்டு வண்டியில் போய்க் கொண்டிருந்த கோவிந்தன் வண்டியை நிறுத்தச் சொல்லி விட்டு "மாமா!" என்று உறவு முறையோடு சின்னக் கருப்பனைக் கூப்பிட்டான். அவன் வண்டியில் நன்கு சாய்ந்து கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்து சின்னக் கருப்பனைக் கூப்பிட்டதே ஒரு பணிவற்ற, பெரிய மனிதத் தன்மையா யிருந்தது. கோவிந்தன் அப்படித் தன்னைக் கூப்பிட்டதில் ஆச்சரியப்படவில்லை சின்னக் கருப்பன். தன்னை மாமன் முறை வைத்துக் கூப்பிட்டதுதான் அவனுக்கு ஆச்சரியமா யிருந்தது. இருந்தாலும் எதற்காகக் கூப்பிட்டான் என்பதைக் கேட்பதற்காகக் கைச் சேற்றைத் தண்ணீரில் கழுவிவிட்டு சமீபமாக வந்து, "என் தம்பி கூப்பிட்டே?" என்றான்.

கோவிந்தன் மெதுவாகத் தன் மீசையை முறுக்கி விட்டுக் கொண்டே அலட்சியமாக வேறெங்கோ பார்த்துக் கொண்டு, "உன் மகள் ஞானத்துக்கு இந்த வருஷம் ஏதாவது கல்யாணம் செய்வதாக உத்தேசம் உண்டா?" என்று கேட்டான்.

சின்னக் கருப்பனுக்கு இந்தக் கேள்வி சற்று வியப்பாகவே இருந்தது. "என்ன

தம்பி, உனக்கு இதிலே இவ்வளவு கவலை வந்திருக்கு?'' என்றான்.

''ஹூஹூம்' வேண்டியவர்கள் என்றால் கவலை இருக்கத்தானே செய்யும்? அப்படி ஏதாச்சும் கல்யாணம் செய்வதாக உத்தேசமிருந்தால் அவசரப்பட்டுக் கொண்டு ஏதாச்சும் தகாத இடத்திலே கொடுத்து விடாதீங்கன்னு சொல்ல வந்தேன். நான் ஒரு உத்தேசம் செய்திருக்கிறேன்......'' என்று மீசையில் வைத்த கையை எடுக்காமலேயே சொன்னான் கோவிந்தன்.

கோவிந்தன் ஒரு தடவை அழுத்தமாகக் கனைத்துவிட்டு மறிட்டை விடாமல் பேச ஆரம்பித்தான். ''உன் மகள் பேரிலே எனக்கு ரொம்பநாளாக ஆசை......''

கோவிந்தன் வார்த்தைகளை முடிக்கவில்லை. சின்னக் கருப்பனுக்கு எங்கிருந்தோ கோபம் அதற்குள் பொங்கிக் கொண்டு வந்துவிட்டது. ''என் மகள்பேரிலே உனக்கு ஆசையா? 'இரட்டை மாட்டு வண்டியிலே குந்தியிருக்கோம்; எது வேணுமானாலும் பேசலாம்ன்னு' நினைச்சுப் பிடாதே — என் மகள் பேரிலே உனக்கு ஆசை இருந்தால் முதலிலே ஒருத்தருக்கும் தெரியாமல் எங்கேயாச்சும் போய் உயிரைப் போக்கிக்கொள். இதை இன்னொரு தடவை நான் கேட்டால் நானே உன்னைக் கொன்றுவிடும்படியாயிருக்கும்'' என்று சொல்லிவிட்டு அந்த வேகத்தோடு வயலில் இறங்கினான்.

கோவிந்தனுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. வண்டிக்காரனிடம் ஆத்திரமும் கோபமும் தொனிக்க ''டேய், மூட்டான், இன்னுமா வண்டியை நிறுத்திக் கொண்டிருக்கே, ஓட்டுடா!'' என்றான்.

(அடுத்த இதழில் முடியும்)

# எட்டணா நஷ்டம்!

என். கே. பி.

பம்பாயில் உள்ள ஒரு பிரபல மோட்டார் கம்பெனி, இரண்டணாவாக இருந்த டவுன் பஸ் கட்டணத்தை ஒன்றரையணாவாகக் குறைத்தது.

இப்படி திடீரென்று கட்டணம் குறைக்கப்பட்டதை ஆதரித்துப் பலர் மேற்படி கம்பெனிக்குக் கடிதம் எழுதினார்கள். அத்துடன் அதைக் கண்டித்தும் ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் எழுதியிருந்ததாவது:—

ஐயா,

தாங்கள் இப்போது பஸ் கட்டணத்தைக் குறைத்தது, மற்றையப் பொது மக்களுக்கு சந்தோஷமளிக்கக் கூடியதாக இருந்த போதிலும், அது என் போன்றவர்களை எவ்வளவு பாதிக்கிறது, எவ்வளவு நஷ்டத்தை உண்டாக்கப் போகிறது என்பதைத் தாங்கள் சிறிதும் உணரவில்லை. ஆகவே நான் இதை முற்றிலும் கண்டிக்கிறேன். விஷயத்தை இவ்வளவு சுருக்கமாகச் சொன்னால் தங்களுக்கு உண்மை விளங்காது. சற்று விளக்கமாகவே எழுதுகிறேன். நான் இவ்வூர் உயர்தரப் பள்ளியில் படிக்கும் ஒரு மாணவன். என் வீட்டிலிருந்து பஸ் மூலம் பள்ளிக்கூடத்துக்குப் போக முன்பு இரண்டணா கட்டணம் செலுத்த வேண்டும். ஒரு நாளைக்கு இரண்டு தடவை போய்விட்டுத் திரும்புவேன். அதற்குக் கட்டணம் எட்டணாவாகும். ஆனால் நான், தாங்கள் நினைப்பது போல, பஸ்ஸில் பிரயாணம் செய்பவனல்ல; நடந்தே போய் விடுவேன். ஆனால் நான், என் தகப்பனாரிடமிருந்து, நாலு தடவை தங்களுடைய பஸ்ஸில் பிரயாணம் செய்யச் செலுத்த வேண்டிய கட்டணமாகிய எட்டணாவைத் தினமும் வாங்கிக் கொண்டு, பள்ளிக்கு நடந்து போய்வருவதின் மூலம், அதை அப்படியே சேர்த்து வைப்பேன். இப்பொழுது, தாங்கள் டவுன் பஸ்



கட்டணத்தைக் குறைத்து விட்டதால், என்னுடைய அப்பா தினமும் ஆறணாதான் கொடுத்து வருகிறார். இதனால் இப்பொழுது எனக்கு தினமும் இரண்டணா வருமானம் குறைந்துவிட்டது. மாதம் மூன்று ரூபாய் பன்னிரண்டணா நஷ்டம் ஏற்படுகிறது. இந்த நஷ்டத்தை ஈடு செய்வதற்கு உடனே ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அவள் துணிகள் இப்பொழுது
எவ்வளவு சுத்தமாகவும்
பளிச்சென்றும்
காண்கின்றன

அது ஸன்லைட்
டினுல் தான்!






# ஸன்லைட்
# சோப்

S. 100-111 TM

# கம்பர் தரும் காட்சி

## 214. கோபத்தின் வேகந்தான் என்ன !

சீதையின் மனதில் எழுந்த கோப வெறியானது எப்படியெல்லாமோ துள்ளிக் குதித்து வெளியே வருகிறது. ஆங்காரத்தில் ஒரு விதமான வெறுப்பும் இகழ்ச்சியும் கலந்த பாவம் வருகிறது.

"பத்துத் தலை இருந்தது போல் கிரீடம் ஒன்றைத் தரித்துக் கொள்ளுகிறாய். தோளும் பல பல இருந்தது போல் தோள்ப் பட்டயம் அணிந்திருக்கிறாய். ரொம்ப வாய்ப்பாக இருக்கிறது."

பத்துள தலையும்தோளும்
பலபல பகழி தூவி,
வித்தக வில்லினுக்குத்
திருவிளையாடற்கேற்ற
சித்திர இலக்கமாகும்;
அல்லது;—செருவில்ஏற்கும்
சத்தியை போலும்! வீரர்க்(கு)
அடாதன செய்யத்தக் கோய் !

[பல பல பகழி தூவி: பல பல அம்புகளை எய்து; வித்தக வில்லினுக்கு: விண்ணியாசமாக வில்லை உபயோகிக்கும் ராமருக்கு; திருவிளையாடற்கு ஏற்ற: விளையாடிக் களிப்பதற்கான; சித்திர இலக்கம் ஆகும்: வேலைப்பாட்டோடு கூடிய குறி ஆகும்—பத்துள தலையும் தோளும்!]

• •
•

ராமனது வில் விளையாட்டெல்லாம் நினைவுக்கு வந்ததும் அவனது அம்பின் வேகமும் கொடுமையும் நினைவுக்கு வருகின்றன.

"உண்மையிலேயே ஜடாயுவுக்குத் தோற்றுத்தான் போனாய்; என்ன பாடெல்லாம் படுத்தினது உன்னை அந்தக் கழுகு. எப்படியோ அகஸ்மாத்தாய் உன் கையிலிருந்த சிவபெருமானது வாளால் அவன் இறந்தான். அல்லாத பக்ஷம் நிச்சயமாக இறந்துதானே போயிருப்பாய் நீ?"

தோற்றனை பறவைக்(கு)அன்று;
துன்றுநீர் வெள்ளம்சென்னி
ஏற்றவன் வாளால்வென்றாய்,
அன்றெனின் இறந்திகண்டாய்;
நோற்றநோன் புடையவாழ் நாள்
வரம்அவை துனித்தஎல்லாம்
கூற்றினுக் கன்றே,வீரன்
சரத்திற்கும் குறித்ததுண்டோ!

[துன்றுநீர் வெள்ளம் சென்னி ஏற்றவன்: துன்னி வரும் கங்கையைச் சடையால் ஏற்ற சிவ பெருமானது; இறந்தி கண்டாய்: இறந்து போவாய் என்று சொல்லவேண்டும்; நோற்ற நோன்பு உடைய: அரிய நோன்பு தோற்றதன் காரணமாகக் கிடைத்த; வாழ் நாள் வரம் அவை: நீண்ட ஆயுள், பலம் முதலிய வை; துனித்த எல்லாம்: கருதியவைகளை யெல்லாம்; கூற்றினுக்கு அன்றே: ஏதோ எமனைத் தடுப்பதற்கு என்று கொள்ளலாமே ஒழிய; வீரன் சரத்திற்கும் குறித்ததுண்டோ: ராமனது அம்பையும் கருதியதுண்டோ, கிடையாது.

குறிப்பு:—உலகத்திலேயே வீரன் என்றும் ராமன் ஒருவன் தான் என்ற குறிப்பில் நிற்கிறது செய்யுள்.]

கடைசியாகக் கோபாவேசம் ஒரு வகையாய் நீங்கி யோசனை செய்யும் நிலைக்கு வருகிறாள் சீதை.

'வெகு மூர்க்கமான சர்ப்பம் கூட மந்திரத்துக்கு வசமாகிறது பக்கத்திலுள்ளவர்கள் இது தகாத காரியம் என்று சொன்னால் ராவணனும் நேர் வழிக்கு வரலாம் அல்லவா?' என்று எண்ணுகிறாள். அந்த எண்ணத்தை அவனிடம் சொல்லுகிறாள்.

கடிக்கும்வல் அரவும்கேட்கும்
மந்திரம்; களிக்கின்றோயை
அடுக்கும்ஈ(து) அடாத(து)ஈ(து)
என்(று)
ஏதுவோ(டு) அறிவுகாட்டி.
இடிக்குநர் இல்லை;உள்ளார்
எண்ணியது எண்ணிஉன்னை
முடிக்குநர் என்றபோது
முடிவன்றி முடிவதுண்டோ!

[களிக்கின்றேமையா: ஏதோ சகலத்தை யெல்லாம் வென்று விட்டோம் என்று வெற்றி கொண்டிருக்கிற உன்னை; அடுக்கும் சது அடாதது சது என்று: இது தகுதியான செயல் இது தகாத செயல் எனவும்; ஏதுவோடு அறிவு காட்டி இடிக்குநர்: காரணத்தை எடுத்துச் சொல்லி உன் அறிவை தெளிவுபடச் செய்து அக்கிரமத்தில் போகாமல் இருக்கச் சொல்லுகிறவர்கள் இல்லை; உன்னார்: உன்னைச் சுற்றி உள்ளவர்களோ; எண்ணியது எண்ணி உன்னை முடிக்குநர்: நீ எண்ணியதையே தாங்களும் எண்ணி உன்னைத் தூண்டுகிறவர்கள் தான்; என்ற போது: என்று ஏற்பட்டிருக்கும் போது; முடிவு அன்றி முடிவு உண்டோ: நீ அடியோடு போவதைத் தவிர்த்து வேறு ஒரு முடிவும் உண்டா?]

• •
•

ராவணனைப் பார்த்துச் சீதை எவ்வளவோ கேவலமாகப் பேசினாள். "கோழை" என்றாள். "வீரன் ராமனுடைய அம்புக்கு இரையாகப் போகிறாய்" என்றெல்லாம் இழிவு படுத்திப் பேசினாள். அந்த வார்த்தைகள் அவனைப் பாதிக்கவில்லை. அவனுடைய எண்ணத்தை மாற்றவில்லை.

"ஆனால், உன்னைத் திருத்துவதற்கு ஆளில்லையே! நல்லவர்கள் வார்த்தையைக் கேட்டுப் பிழைப்பதற்கும் உனக்கு வழி இல்லையே!" என்று ஒரு பரிவோடு சொன்னாள். இதைக் கேட்ட மாத்திரத்தில் அவனுக்கு இதுவரையுமிருந்த பணிவு அடக்கம் எல்லாம் போய் விட்டது.

என்(று)அ றத்துறை
கேட்டலும், இருபது
நய னம்

மின்தி றப்பன
ஒத்தன; வெயில் விடு
பகு வாய்

குன்(று)இ றத்தெரிந்(து)
உரப்பினன்; குறிப்ப தென்:
கா மன்

தன்தி றத்தையும்
கடந்தது சீற்றத்தின்
தகை மை

[என்று அறத் துறை கேட்டலும்: மேலே சீதை சொன்ன தர்ம நெறியைக் கேட்டவுடன்; இருபது நயனம் மின் திறப்பன ஒத்தன: இருபது கண்களும் மின்னல் கீற்று வெளி விடுவன போலத் தோன்றின அந்த போல்; வெயில் விடு பகுவாய்: பல்லை நெறு நெறு என்று கடிக்கும் போது பிரகாசம் வெளிவந்தது போல் இருந்தது; இப்போப் பட்ட பெரிய வாயிலிருந்து: குன்று இறத் தெரிந்து உரப்பினன்: மலையே ஒரு குன்றிருந்தால் அது தகர்ந்து போகும்படி அதட்டி ஆரவாரித்தான். அவ்வளவு பொறாத கோபம்; குறிப்பதென்: இதிலிருந்து அறிந்து கொள்ள வேண்டியதென்ன; காமன் தன் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை: காதல் உணர்ச்சியை வெருட்டி விட்டது அந்தக் கோபத்தின் வேகம்.]

யாருக்கும் மனச்சாட்சி என்பது ஒன்றிருக்கிறது. தர்ம சாஸ்திரங்களையும் தர்ம வாழ்க்கையையும் ஆராய்ந்துணர்ந்தவர்களுக்கோ மனச்சாட்சியின் வேகமும் கூர்மையும் அதிகமாக இருக்கும். அவர்களுடைய இதயத்தை அந்த மனச்சாட்சி அதிகமாகத் தைக்கும். உலகம் கண்ட உண்மை இது. ராவணனது கல்வியும் வாழ்க்கையுமே சேர்ந்து மனச்சாட்சிக்கு மிக்க கூர்மை கொடுத்திருக்கின்றன. அந்த மனச்சாட்சி அவனது மனசை வேகத்தோடு குத்தி விட்டது. அது காரணமாக மன நிலை தடுமாறிக் கோப வெறிக்குள் விழுந்து விடுகிறான். இந்த உணர்ச்சி பாவத்தை செய்யுளில் தெளிவாய்க் காணலாம்.

## விமான விபத்து

சென்ற மாதம் 24-ம் தேதி மீனம்பாக்க விமான நிலையத்தில் ஏற்பட்ட கோர விபத்தின் காரணமாக ஸ்ரீ ஆர். எம். சோலையன் உயிர் துறந்தார்.

ஸ்ரீ சோலையன் கொஞ்ச காலமாக மேற்படி விமான நிலையத்தில் விமானப் பயிற்சி பெற்றுக் கொண்டு வந்தார். அவருடைய விமானத்தில் திடீரென்று தீப் பிடித்துக் கொண்டதன் விளைவாக அவர் மாண்டார்.

காலஞ் சென்ற ஸ்ரீ சோலையனுக்கு வயது 24. நாலரை வயதுக் குழந்தை ஒன்றும் அவருக்கு இருக்கிறது. அவருடைய தந்தையாரே ஸ்ரீ ஆர். எம். ராமஸ்வாமி செட்டியார் பள்ளத்தூர் பஞ்சாயத்து போர்ட் தலைவர். காலஞ் சென்ற ஸ்ரீ சோலையனுடைய குடும்பத்தாருக்கு நம்முடைய அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# வட்ட மேஜை

ஜனிந்தலை
25—5—48

★

## கடமையைச் செய்ய முடியுமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

நானும் எனது கணவரும் ஆரம்ப ஆசிரியர்கள். இருவரும் சர்க்கார் பாடசாலையில் வேலை செய்ய ஆசை கொண்டு மனுச் செய்தோம். மனு விசாரணையில் இருவருக்கும் ஒரு பள்ளியிலோ அல்லது ஒரு ஊரிலோ வேலை தரும்படி கேட்டுக் கொண்டோம். அதிகாரியும் அதற்கு ஒப்புக்கொண்டார்.

ஆனால் எங்களுக்கு வந்த உத்தரவில் என்னை ஒரு பள்ளிக்கும் என் கணவரை ஒரு பள்ளிக்கும் போய் வேலையில் அமருமாறு எழுதியிருந்தது. நான் இருக்கும் இடத்திலிருந்து உத்தியோகம் பார்க்கப் போகும் ஊருக்கு, இருபத்தைந்து மைல் ரயிலிலும் இருபத்தைந்து மைலுக்கு அதிகமாக மோட்டார் வண்டியிலும் இரண்டு மைல் கால் நடையாகவும் போகவேண்டும். அவருக்கும் ஏறக்குறைய அப்படியேதான்.

'பட்டிக்காட்டான் மிட்டாய்க் கடை பார்த்தாப்போல' என்று சொல்வார்களே, அது போல இருந்தது அங்கு நான் கண்ட முதல் காட்சி. குடியிருப்பு வசதியோ இல்லை. யுவதியாகிய என்னைப் பழித்துப் பேசுகிறது கிராமம். தனியாய்ச் சென்றதனாலோ என்னவோ? இந்த நிலையில் என் கடமையைச் செய்ய முடியுமா? ஒப்படைக்கப்பட்ட பிள்ளைகளைத் தேர்ச்சியடையச் செய்ய முடியுமா? எங்கள் வாழ்க்கையும் பாழாகிறதல்லவா? தம்பதி ஆசிரியர்களை ஒரே இடத்தில் வேலைக்கும் போட்டால் சர்க்காருக்கு நேரும் நஷ்டம் தான் என்ன?

ஜெ. பிச்சையம்மாள்.

மானம்பூச்சாவடி,
18—6—48.

## தஞ்சைக்கு ஒரு காலேஜ்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

சென்ற செப்டம்பர் மாதத்தில் தமிழ் நாட்டில் உணவுப் பஞ்சம் அதிகமாக இருந்தது. உணவு இலாகா, தானிய ஸ்டாக் சில நாட்களுக்குத்தான் இருக்கிறது என்று கூறியது. ஆந்திர 'தேசபக்தர்கள்' தற்போதைய மந்திரி சபையைக் கவிழ்த்து விடலாமென்று நினைத்துத் தானியத்தைத் தர மறுத்தார்கள். டில்லியிலிருந்து பிரதமர் கனம் ரெட்டியார் பறந்து வந்தார் சென்னைக்கு. அடுத்த ரயிலில் அவசரமாகத் தஞ்சை ஜில்லாவுக்கு ஓடி வந்தார். "தஞ்சாவூர் வாசிகளே! தயங்காமல் தாராளமாக உதவி அளியுங்கள்!" என்றார். அப்படி இப்படி என்று அங்கும் இங்குமாகத் தஞ்சாவூர் ஜில்லாவில் பிரதானமான இடங்களிலெல்லாம் பிரசங்கம் செய்து ஆயிரம் ஆயிரம் டன்னாக அரிசியை வாங்கிச் சென்றார். பஞ்சம் பறந்தது. தமிழகத்தின் பஞ்சம் கொஞ்சமும் எட்டிப் பார்க்க விடாமல் மானம் காத்தது தஞ்சாவூர் ஜில்லா.

சமீபத்தில் சென்னை கல்வி இலாகா, சென்னை மாகாணத்தில் காலேஜ் பஞ்சத்தை நீக்க எட்டுக் காலேஜுகள் இவ்வாண்டில் நிறுவப் போவதாக அறிவித்தது மிக்க சந்தோஷமான விஷயம். ஆனால் அவைகளில் ஒன்றாவது தஞ்சாவூர் ஜில்லாவுக்கு அருகில் கூட இல்லை. உணவுப் பஞ்சத்தைச் சரியான சமயத்தில் போக்கிய தஞ்சைக்குப் பிரதியுபகாரமாகவாவது காலேஜ் பஞ்சத்தைப் போக்க மந்திரிகளுக்குச் சிறிதாவது எண்ணம் எழவில்லை.

தமிழகத்தின் தானியக் களஞ்சியம் என்ற பெரும் பெயர் பெற்ற தஞ்சாவூர் ஜில்லாவின் தலை நகரமாகிய தஞ்சாவூரில் ஒரு கல்லூரி கூட இல்லை. இவ்விஷயத்தில் அசட்டையாக இராமல் தஞ்சாவூரில் அதி சீக்கிரமே ஒரு காலேஜ் நிறுவ ஆவன செய்யுமாறு தஞ்சை ஜில்லா மாணவர்களின் சார்பாக சென்னை மந்திரிகளைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ந. சிவகுருநாதன்.

திருத்தங்கல்
19—6—48

## சர்க்கார் நடத்தட்டும்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

இந்திய சர்க்கார் பாகிஸ்தானுக்குத் தீப்பெட்டி ஏற்றுமதி செய்யக்கூடாதென்று தடை உத்தரவு போட்டதிலிருந்து சிவகாசியிலும் திருத்தங்கலிலும் சுமார் 30 பாக்டரிகளில் வேலை சரியாக நடக்கவில்லை. இதனால் சுமார் 20,000 தொழிலாளர்கள் கஷ்டப்படுகிறார்கள். உற்பத்தியும் நாளுக்கு நாள்



குறைகிறது. அத்துடன் தீப்பெட்டி முதலாளிகள் சங்கம் கூலி குறைப்பது என்று தீர்மானம் செய்து அதை நடைமுறையில் அமுலுக்குக் கொண்டு வரப் பிரயத்தனம் செய்கின்றனர். தொழிலாளிகள் குறைந்த சம்பளம் வாங்க மறுத்தால் கதவடைப்பு செய்கிறது முதலாளி வர்க்கம். அத்துடன் ஆள் குறைப்பு நடைபெறுகிறது. சமீபத்தில் பம்பாயில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிய காங்கிரஸ் அக்கிராசனர் டாக்டர் ராஜேந்திரப் பிரஸாத் 'உற்பத்தியைப் பெருக்குங்கள், லாபத்தில் தொழிலாளிகளுக்கும் பங்கு உண்டு' என்று சொன்னார். எங்ஙனம் உற்பத்தியைப் பெருக்குவது? ஒரு பக்கம் மந்திரிகளின் 'உற்பத்தியைப் பெருக்குங்கள்' என்ற அறிக்கைகள்; மற்றொரு பக்கம் முதலாளி வர்க்கத்தின் கதவடைப்பு.

இதை எல்லாம் சென்னை சர்க்கார் கவனிக்குமா? அல்லது தீப்பெட்டித் தொழிலையும் ஒரு லாபகரமான தொழிலாக நினைத்து அதையும் சர்க்காரே நடத்துமா?

எம். கே. நாயப்பன்.

கடலூர்,
25—5—48

## கௌரவப் பரிசு

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

லஞ்சம் வாங்கும் உத்தியோகஸ்தர்கள் தான் குற்றவாளிகள் என்று நாம் நினைக்கிறோம். ஆனால், பொது மக்களே இதற்கு மறைமுகமாகப் பொறுப்பாளிகள். எல்லா உத்தியோகஸ்தர்களுக்கும் இதில் இச்சை இருக்க முடியாது. அப்படி இப்பழக்கத்துக்கு விலக்காக இருப்பவர்களையும் பழக்கி வைப்பது பொது மக்கள் தான். இதற்குக் காரணம் தங்கள் சுயதேவை அதிசீக்கிரத்தில் பூர்த்தியாக வேண்டும் என்பது தான்.

முதலில், அவருக்கு வேண்டிய அத்தியாவசியமான, நினைத்தபோது கிடைக்காத, சொற்ப விலையுள்ள பொருள்களை வீட்டிற்கு அனுப்பி வைக்கிறார்கள். 'சாமான் தானே, அதில் ஒன்றும் பாதகம் இல்லை' என்று கொஞ்சம் மனதைச் சரிப்படுத்திக் கொண்டு பொருளை எடுத்துக் கொள்ள அனுமதிக்கிறார்கள். பிறகு அதை விட அதிக விலையுள்ள பொருள்கள். பிறகு தானாகவே லஞ்சம் வாங்குபவருக்கு ஊக்கம் பிறக்கிறது. தானாகவே கேட்கிறார். வாங்கிக் கொடுக்கின்றவர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். "சாமான் கிடைக்கவில்லை. இதை வைத்துக் கொள்ளுங்கள், பரவாயில்லை" என்று நீட்டுகின்றனர் பணத்தை. முதலில் நல்லவராக இருந்த உத்தியோகஸ்தர் பிறகு லஞ்சம் வாங்குபவராகிறார்.

ஆகவே இதை ஒழிக்க ஒரு வழி, எந்த உத்தியோகஸ்தர்கள் இம்மாதிரி பழக்கத்தை கையோடு பிடித்துக் கொடுக்கின்றார்களோ அவர்களுக்குக் கௌரவப் பரிசு அவ்வப்போது கொடுப்பது என்றால், பிடித்துக் கொடுப்பதற்கு ஆர்வம் உண்டாகும்.

சகுந்தலா முருகேசன்.

திருவண்ணாமலை
25—5—48

## பஸ் ஸ்டாண்டா—ஒரு நரகம்!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

நான் சென்னை நகரத்தின் மத்தியில் நரகத்தைக் கண்டேன். அந்த இடம் சென்னையிலிருந்து வெளியூர் செல்லும் பஸ்கள் நிற்குமிடம். பர்மா ஷெல் ஆபீசுக்கும் பின்புறம், சுமார் நூறு பஸ் இருக்குமிடத்தில், கேவலம் ஐம்பது பேர்கூட நிற்க முடியாத ஒரு ஓட்டுக் கட்டடம்: தரையோ புழுதி வாய்ந்தது. பக்கத்தில் சமோசாக்கள் ஷர்பத் கடைகள். இதற்குப் பக்கத்தில் பொது ஜனக்கக்கூஸ். தண்ணீர் குடிக்க ஒரே குழாய். அதைச் சுற்றி ஒரே உளையும் துர்நாற்றம். கரி வண்டி பஸ்கள் ஓடி நிலம் ஒரே புழுதியாக இருக்கிறது. எந்த பஸ் எங்கு போகிறது என்று சொல்வதற்கு ஒருவரும் கிடையாது. பஸ் நிற்குமிடத்துக்கும், பிரயாணிகள் நிற்கும் ஷெட்டுக்கும் சுமார் ஐம்பது கஜம் இருக்கும். சரியாக வண்டிகள் எல்லாம் மத்தியானம் பன்னிரண்டு முதல் மூன்று மணி வரையில் போகின்றன. பங்குனி மாத வெயிலில், பெட்டி பேழைகளுடன், பெண்கள் கையில் குழந்தையுடன் வந்து பஸ்ஸை விட்டு இறங்கினால் கால் பற்றுகிறது. மேலே வெயில். அந்தச் சமயம் கூலியாட்கள் தங்கள் கட்சி வலுவென்று நினைத்து வாய் கூசாமல் கூலி கேட்கிறார்கள். வெய்யிலுக்கு ஒதுங்கலாமென்றால் ஷெட்டுக்குப் போகக் குறைந்தது அறுபது கஜமும் தெருப்புழுதியில் நடக்க வேண்டும். நாம் பெரிய சாலைகள் போடவும் நதிகளைத் தேக்கவும் ஆயிரக் கணக்கான வீடுகளைக் கட்டிக் கொடுக்கவும் கோடிக் கணக்கான மான்யம் கொடுக்கவும் திட்டம் போடுகிறோம். ஆனால் நம் கண் முன்னே நடப்பது எமலோக தண்டனை.

ந. ச. கிருஷ்ணராஜன்.

திருச்செந்தூர்
29—5—48

## காய்கறித் தோட்டங்கள்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

சமீபத்தில் சென்னையில் நடந்த பழக் காட்சியின் பயனாக வீடுகளிலுள்ள தோட்டங்களில் காய்கறி - பழத் தோட்டங்கள் போடுவதின் அவசியம் பற்றியும், அவைகள் இந்த உணவு நெருக்கடி காலத்தில் எவ்வாறு மக்களுக்குப் பயன்படும் என்கிற விஷயமும் நன்கு எடுத்துக் காட்டப்பட்டது. கீரை, காய் கறி, பழங்கள் முதலியன ஆகார வஸ்துக்களில் முக்கிய இடம் பெறவேண்டுமென்றும், அவைகள் தேகத்திற்கு அத்தியாவசியமான உப்புச்சத்து, அயம் போன்ற உலோக சத்துக்களைக் கொடுக்கின்றனவென்றும், அவைகளில் 'வி' டைமின் என்று சொல்லும் ஜீவிய சத்து அதிகமாய் இருக்கின்றன வென்றும் உணவு நிபுணர்கள் சொல்லுகின்றார்கள். இவைகளை விலைக்கு வாங்குவதை விட, கூடியவரை வீட்டுத் தோட்டங்களில் பயிராக்க வசதியுள்ளவர்கள் அவ்வாறு செய்வது, நல்ல தேகாப்பியாசம், பொழுதுபோக்கு, உற்சாகம் முதலியவற்றை அளிப்பதோடு குடும்ப சிக்கனத்துக்கும் மிக்க பயன்படும். இது சம்பந்தமாக ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.



வெள்ளாடுகள் எந்தப் பயிரையும் இலைகளையும் தின்னும். கிராமங்களிலும் சிறு பட்டணங்களிலும் வெள்ளாடுகள் கட்டுப்பாடின்றி வெளியில் விடப்படுகின்றன. அநேக இடங்களில் பன்றிகளும் கட்டுப்பாடின்றி விடப்படுகின்றன. இவைகளால் பயிர் செய்யப்பட்ட வீட்டுத் தோட்டங்கள் அழிக்கப் படுகின்றன. பனை மட்டை வேலிகளையும் இவ்வாடுகள் தாண்டியும் குறுக்கே நுழைந்தும் சேதம் செய்கின்றன. பலமான கல் வேலி அல்லது முள்வேலி அமைப்பது அதிகச் செலவாகும். முருங்கை முதலிய மரப் பட்டைகளைக் கூட இவ் வெள்ளாடுகள் உரித்து விடுகின்றன. ஆகவே அநேக தோட்டக்காரர்கள், வீட்டுத் தோட்டங்களை வெள்ளாடு, பன்றி இவைகளுக்கு அஞ்சி பயிர் செய்யாது விடுகின்றனர். ஆகவே, இவைகளைக் கட்டுப்படுத்த வேண்டிய ஏற்பாடு செய்யப் பட்டாலொழிய வீட்டுத் தோட்டங்கள் விருத்தியாகா.

தி. கா. அறம்வளர்த்தநாதன்

கள்ளிப்பட்டி.
24-5-48

## விவசாய ஆபீஸ்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

ஒவ்வொரு தாலுகாவிலும் விவசாய ஆபீஸ் ஒன்று இருக்கிறது. அதில் ஒரு விவசாய டிமான்ஸ்ட்ரேட்டர் இருக்கிறார். இந்த ஆபீசாலும், அதில் உள்ள ஆபீசராலும் கிராமத்தில் உள்ள பெரும்பாலான ஏழை விவசாயிகளுக்கு ஒரு பிரயோஜனமும் கிடையாது. அந்தத் தாலுக்காவில் உள்ள 10, 12, பெரிய மிராசுதாரர்களிடம் சம்பந்தம் வைத்துக் கொள்ளுகிறார்கள். சர்க்கார் உதவித்திட்டங்களெல்லாம் இவர்களுடன் நின்று விடும். விவசாய டிமான்ஸ்ட்ரேட்டர்கள் கிராமங் கிராமமாகச் சென்று, நவீன முறையில் விவசாயம் செய்வது எப்படி என்று விளக்கிக் காட்ட வேண்டும். உற்பத்தியை அதிகப்படுத்தும் வழிகளைச் சொல்லித்தர வேண்டும். பயிர்களுக்கு வியாதி ஏற்பட்டால் விவசாயி தன் தலைவிதியை நொந்து கொள்ளுகிறான். எப்படி மக்கள் நோயைத் தடுக்கச் சுகாதார அதிகாரிகள் சேவை செய்கிறார்களோ அது போல் பயிர்களுக்கு ஏற்படும் நோய்களையும் தடுக்க முற்பட வேண்டும்.

சர்க்கார் விவசாயிகளுடைய வண்டிக்கு வேண்டிய பட்டா இரும்பைக் கண்ட்ரோல் விலைக்குக் கிடைக்க ஒரு திட்டம் வகுத்திருக்கிறார்கள். நான் இதன்படி சென்னை விவசாய டைரக்டருக்கு எழுதினேன். சில நாட்களில் சென்னையில் ஒரு கம்பெனியைக் குறிப்பிட்டு அதில் ஒரு ஜோடி பட்டா வாங்கிக்கொள்ளும் படி உத்தரவு வந்தது. சென்னைக்கும் எங்கள் ஊருக்கும் 300 மைல். ஒரு ஜோடி பட்டாவின் விலை சுமார் 24-0-0 ரூபாய். நான் மதராசுக்கு ரூ. 30-0-0 செலவு செய்து கொண்டு போய்ப் பட்டா வாங்கிவர வேண்டும். எங்கள் ஜில்லாவின் தலை நகரிலோ, தாலுகாவின் தலைநகரிலோ வாங்கும்படி உத்தரவு கொடுத்திருக்கலாமல்லவா?

கோதண்டராமன்.

கோயமுத்தூர்
31—5—48

## கொள்ளை லாபம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

கோவை மில் முதலாளிகளின் போக்கைப் பார்த்தால் பொது மக்களுக்கும் வியாபாரிகளுக்கும் மிகுந்த கோபம் உண்டாகிறது. ஏனெனில் சர்க்கார் நூல் மீதிருந்த கண்ட்ரோலை நீக்கினவுடனே, அவர்கள் தங்கள் மில்களில் உற்பத்தியாகும் நூலின் விலையைக் கண்ட்ரோல் விலையை விட ஐம்பது சதவிகிதம் உயர்த்தினார்கள். உயர்த்தியும் கூட, மில்களின் உற்பத்தியாகும் நூலை சிறிதளவாகவே விற்று மார்க்கட்டில் அதிக கிராக்கியை ஏற்படுத்தி விட்டார்கள். ஆதலால் மில் விலையைவிட மார்க்கட்டில் நூல் விலை அதிகமாகவே இருந்து வருகிறது. உதாரணமாக 40-ம் நெம்பர் நூலை கண்ட்ரோல் நீக்கினவுடனே மில்காரர்கள் 27-8-0 யாக உயர்த்தினார்கள். உயர்த்திய பிறகுகூட சிறிதளவு பேல்களையே விற்றும் வந்தார்கள். அதனால் மார்க்கட்டில் 40-ம் நெ. நூலின் விலை இப்போது 40 ரூபாயாக இருக்கிறது. இதனால் மில்காரர்கள் இந்த ஒரு வாரத்திற்கு



முன்பு தங்கள் நூலை மில் விலைக்குக் கொடுத்து வந்ததையும் நிறுத்திவிட்டு, இப்பொழுது மார்க்கட்டில் உள்ள விலைக்கே விற்க ஆரம்பித்து விட்டார்கள். இதைப் பற்றி மில் முதலாளிகளின் சங்கத்தார் ஒரு நீண்ட அறிக்கையையும் பத்திரிகைகளில் வெளியிட்டு விட்டார்கள். இவ்வறிக்கையானது பொது மக்களின் கண்களில் மண் தூவுவதேயன்றி வேறெதுவுமில்லை. இப்போது மில்காரர்களுக்கு உற்பத்தியாகும் செலவை விட மூன்று மடங்கு அதிக லாபம் கிடைக்கிறது. மேலும் இப்பொழுது மில்களில் குறைந்த ஆட்களை வைத்துக்கொண்டே முன்போல (அதாவது அதிக ஆட்கள் வேலை செய்து கொண்டிருக்கும் போது எவ்வளவு உற்பத்தி யானதோ) அந்த அளவு இப்பொழுது உற்பத்தி செய்கிறார்கள். இதனால் மில் முதலாளிகளுக்கு கூலியிலும் அதிக லாபம் கிடைக்கிறது. மில் முதலாளிகள் இவ்வளவு லாபம் சம்பாதித்தும் அங்கு வேலை செய்யும் தொழிலாளர்களுக்குக் கஷ்டமில்லாமல் ஜீவனம் நடத்த சௌகரியங்கள் செய்து கொடுக்க முன் வந்தார்களா? அதுவுமில்லை. ஆகையால் அரசாங்கத்தார் இதற்காக ஏதாவது ஒரு சட்டம் இயற்றி கொள்ளை லாபத்தை வசூலித்து நாட்டின் முன்னேற்றத்திற்கான பல முக்கியமான கைத் தொழில்களுக்கு உபயோகப்படுத்த வேண்டும்.

துரைசாமி.

லால்குடி.
27—5—48

## தண்டம் ஒழிக!

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

மாணவர்கள் கல்லூரியில் சேருவதற்குப் படும் அவதியைத் தங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இண்டர்மீடியட் தேறிய மாணவன் திரிசங்கு சுவர்க்க நிலையினின்றும் தப்ப பல கல்லூரிகளில் இடத்திற்கு முயற்சி செய்கிறான். இதில் ஒவ்வொரு கல்லூரியிலும் ரிஜிஸ்ட்ரேஷன் பணம் என்ற ஒரு "லாட்டரி" உண்டு. பணம் கட்டினால்தான் மாணவர்களின் மனு எடுத்துக் கொள்ளப்படும். மாணவர்கள் கல்லூரியில் அனுமதிக்கப் படாவிட்டாலும் இந்த ரிஜிஸ்ட்ரேஷன் பணம் வாபஸ் செய்யப்பட மாட்டாது. உதாரணமாக:—

| | | |
|---|---|---|
| பிரஸிடென்ஸி கல்லூரி | 5 | ரூ. |
| இஞ்சினீரிங் கல்லூரி | 5 | ரூ. |
| சட்டக் கல்லூரி | 5 | ரூ. |
| கிறிஸ்தியன் கல்லூரி | 3 | ரூ. |
| பச்சையப்பன் கல்லூரி | 3 | ரூ. |
| ஜோசப் கல்லூரி | 1 | ரூ. |

ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணம் இல்லாத கல்லூரி இந்த மாகாணத்திலே இல்லை என்று கூறலாம். கல்லூரியில் இடம் கிடைத்த பிறகு கட்டணம் கொடுப்ப தென்றாலும் பரவாயில்லை. "இந்தத் தண்டம் ஒழிக!" என்று மாணவ சமூகம் கோருகிறது.

எல். எஸ். பார்த்தசாரதி.

---

* இந்த இதழில் வெளியாகியிருக்கும் வட்ட மேஜைக் கடிதங்களில் சிறந்ததாக ஜே. பிச்சையம்மாள் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.

பாளையங்கோட்டை.
14—6—48

## பழைய மாமூல்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

சென்ற இதழில் ஸ்ரீ ஆ. ராமசாமி அவர்கள் 'மடக் கடையில் என்ன?' என்ற தலைப்பின் கீழ் எழுதிய கடிதத்தை நான் வரவேற்கிறேன். நண்பர் சொல்லுவது யாவும் உண்மையே. கலால் இலாகாவில் வேலை பார்த்த அதிகாரிகளில் பலரை, மதுவிலக்கு இலாக்காவிற்குக் குடியேற்றம் செய்வித்ததால்தான் இந்த ஊழல்கள் யாவும் நடக்கின்றன. தன்னுடைய கடமை என்ன என்பதை உணராத இவர்கள் அந்தப் புனித இலாக்காவிலும் தங்களுடைய பழைய மாமூலை ஆரம்பித்து விடுகிறார்கள். தாங்கள் மட்டுமின்றி தங்களுடைய சக அதிகாரிகளுக்கும் லஞ்சம் வாங்கும் வழக்கங்களைக் காட்டி ஆசையை உண்டுபண்ணி விடுகிறார்கள். இதைப் பின் பற்றி வந்து விடுகிறது லஞ்சம், மாமூல், ஊழல், எல்லாம்.

கலால் இலாக்காவில் உள்ளவர்கள் பலர் பயங்கர லஞ்சப் பேய்களின் கோர உருவங்களே யன்றி, அதிகாரிகளல்ல. மதுவில் மூழ்கிக் குளித்துத் திளைத்து விளையாடி, மது வியாபாரிகளிடமிருந்து பொன்னையும் பொருளையும் வாங்கி வாங்கி அள்ளி அள்ளிச் செலவழித்த இவர்களையே அந்தப் புனிதமான மதுவிலக்கு இலாக்காவுக்கு அதிகாரிகளாக நியமிப்பதால்தான் மேற்படி நண்பர் சொன்ன ஊழல்கள் யாவும் ஏற்படுகின்றன. நல்ல நடத்தையும் அந்தஸ்தும் யோக்கியதையும் உடைய வாலிபர்களைச் சேர்த்துக் கொண்டுதான் இப்புனித இலாகா வெற்றிக் கொடி நாட்ட வேண்டும்.

பி. தேவர்.

மதுரை
15—6—48

## ஏகபோகம் ஒழிக!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

இங்கு கடந்த இரண்டு வாரங்களாக பஞ்ச நிவாரணக் கடைகளில் கிடைக்கும் அரிசி ஒரேயடியாய் ஜலம் தோய்ந்திருக்கிறது.

தற்சமயம் 72 நிவாரணக் கடைகள் இங்கு இருக்கின்றன. இக் கடைகள் மூலம் ஜனங்களுக்கு நியாயமான விலையில் ஏறக்குறைய வாரம் ஒன்றுக்கு 3000 மூட்டை அரிசி விநியோகிக்கப் படுகிறது. இங்கு இருபத்தைந்து லைஸென்ஸ் மொத்த வியாபாரிகளும் நான்கு எம். ஆர். சி. யூ. ஸ்டோர்ஸ் கூலி மில்களும் இருக்கின்றன. கொடுக்கப் பட்டிருக்கும் கோட்டா நெல் இந்த 29 பேருக்கும் சரியாகப் பகிர்ந்து கொடுக்கப் பட்டிருந்தால் இந்த மாதிரி பதமான அரிசி கிடைக்க வேண்டிய காரணமே இராது.

இப்போது விநியோகிக்கப்படும் அரிசி தஞ்சாவூர் பிப்ரவரி மாதக் கோட்டாவாகும். இது பூரணமாக எம். ஆர். சி. யூ. எஸ்ஸுக்கு கொடுக்கப் பட்டிருக்கிறது. இன்றையத் தேவையை எம். ஆர். சி. யு. எஸ். கூலி மில்களான நான்கிலேயே பூர்த்தி செய்யப்பட வேண்டியிருக்கிறது. ஏழு நாளில் நெல் மூட்டை 6000த்தை நான்கு மில்களை அவித்து உலர்த்தி அரைத்துக் கொடுப்பதென்பது முடியாத காரியம். இதனால் சரியானபடி நெல்லை உலர்த்தாமல் அரைத்து நிவாரணக் கடைக்காரர் ஒவ்வொருவருக்கும் நாள் ஒன்றுக்கு ஐந்தோ ஆறோ மூட்டை அரிசி மட்டும் கொடுக்கப்படுகிறது. பதமான அரிசி யாவருக்கும் எந்நேரமும் கிடைப்பதில்லை. ஒவ்வொரு கடை முன்பும் தினமும் ஜனங்கள் கூட்டமாக நிற்கிறார்கள்.

இந்த ஏகபோக உரிமை ஒழிக்கப்பட வேண்டும். சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சுறுசுறுப்பாக இருக்கிறார்களா என்று கண்காணிக்க வேண்டியது சர்க்கார் பொறுப்பு.

ம. கணேசன்

* * *

## எப்படித் தேறினார்?

தற்போது காங்கிரஸ் அக்கிராசனராகவும் அரசியல் நிர்ணய சபைத் தலைவருமாக இருக்கும் பாபு ராஜேந்திர பிரஸாத் கல்லூரியில் வாசித்துக் கொண்டிருந்தபோது, ஒரு பரீட்சையில் மாகாணத்திலேயே முதன்மையாகத் தேறினார். அவருடைய சகமாணவ நண்பர் ஒருவர் இதைப் பாராட்டி ராஜன் பாபுவுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

அதற்கு ராஜன் பாபு எழுதிய பதில்: "நண்பா, நீ ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். பரிசோதக அதிகாரிகள் ('எக்ஸாமினர்'கள்) எல்லோரும் முட்டாள்கள். உனக்கு என்னைவிட எல்லாப் பாடங்களிலும் நல்ல தேர்ச்சி உண்டு. ஆனால், என்னுடைய அறியாமையை எல்லாம் மறைத்து, பரிசோதக அதிகாரிகளை எப்படி முட்டாளாக்குவது என்பதில் உன்னைவிட எனக்கு நல்ல தேர்ச்சி உண்டு. அதனால்தானோ என்னவோ நான் மாகாணத்திலேயே முதன்மையாகப் பாஸ் செய்துவிட்டேன்!"

உங்கள் சருமம் நாளுக்கு நாள்



## அதிக அழகு பெறுவதை காண்பீர்கள்

**கேடில் கலந்த சோப் ரெக்ஸோனு ஒன்றே. அது உங்கள் சருமத்திற்கு புத்துயிரளிக்கும்; பரிசுத்தத்தையும் புதுப்பொலிவையும் தரும்.**

ரெக்ஸோனுவை தவறாமல் உபயோகியுங்கள். சில தினங்களுக்குள் உங்கள் சருமம் ஆச்சரியமான மாறுதலடைவதை காண்பீர்கள். கேடில், சருமத்தை சுத்தம்செய்து மிருதுவாக்கி ஆரோக்கியமூட்டும் சக்திவாய்ந்த தைலங்களால் விஞ்ஞான முறைப்படி தயாரிக்கப்பட்ட கலப்புமருந்து. இது உங்கள் சருமத்தை ஆரோக்கியமடைய உதவுவதுடன் அப் பழுக்கற்றதாகவும் திடமாகவும் செய்கிறது. மேலும் எப்பொழுதும் திகழும் புதுசோபையையும் உங்கள் சருமத்திற்குத்தரும்.

**கேடில் சேர்ந்த ரெக்ஸோனுதான் இதைச்செய்கிறது!**




# ரெக்ஸோனு
# சோப்

RP. 35-172 TM

விலைகள் குறைக்கப்பட்டிருக்கின்றன. சாம்பிள் வேண்டுவோர் ரூ. 3. மணியார்டர் மூலம் அனுப்பவும்.

# டன்லப்

## ட்ரக் டயர்களும் பஸ் டயர்களும்

அதிக அனுபவத்தினால்
அவை அதிக வலு
வாய்ந்திருக்கின்றன

வேலை நிலைமைகளில் டன்லப் ட்ரக் டயர்களும் பஸ் டயர்களும் எவ்விதம் சமாளித்து உழைக்கின்றதென்பதை கவனியுங்கள். இந்த அதிக உழைப்பே, டயர் தயாரிப்புத் தொழிலில் நீண்டகாலமாக ஈடுபட்டு டன்லப் ஸ்தாபனத்தார் பெற்றுள்ள அதிக அனுபவத்தின் மதிப்பை நிரூபிப்பதற்கான அத்தாட்சியாக விளங்குகிறது




DK 317 TM

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119 Sladens Garden, Poonamallee High Road, Kilpauk Madras

(ESTD:  1907)

கிளைகள் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்ட் ரோடு
மயிலாப்பூர், தியாகராய நகர், புரசவாக்கம், எழும்பூர்

●

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும்
பர்மாவிலும் ப்ராஞ்சுகளும் ஸப் ஆபீஸ்களும் உள்ளன.

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 62,00,000 |

எல்லாவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும்.

என். கோபால அய்யர், செக்ரடரி.

# தி இந்தியன் பாங்க் லிட்.,

தலைமை ஆபீஸ் : இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்,
நார்த் பீச் ரோடு . . . மதறாஸ்.

N.R.B.

---

## உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது !

ப்ரூக்லாக்ஸ் பார்வைக்கும் ருசிக்கும் தித்திப்பான சாக்லெட்டைப் போலிருக்கும். வயிற்றுக் குத்து முதலியன இல்லாமல் உடம்பை இன்பமாய்ச் சுத்திகரிக்கும். ஊக்கமற்ற நிலைமைக்கு காரணமாயுள்ள மலச்சிக்கலை ப்ரூக்லாக்ஸ் விரைவில் அறவே அகற்றிவிடும். வயதானவர்களுக்கும் குழந்தைகளுக்கும் இன்றியமையாதது.

# ப்ரூக்லாக்ஸ்

சாக்லெட்
லாக்ஸேடிவ்

பெரிய சைஸ் டின் ஒன்றுக்கு 1-12-0 சிறிய சைஸ் டின் ஒன்றுக்கு 0-12-0

எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள் :

ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி, 99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்

REGD. No. M. 4392

எழில் மிகு தோற்றம்!



ஏர்ஸ்பன் பேஸ் பவுடரின் இணையிலா
வர்ணங்களில் ஒன்றினால் எழில் பெற்று
விளங்குங்கள் ......
ரம்மியமான நறுமணம் ......
பட்டுப்போன்ற மிருதுவான இப்பவுடர்
சருமத்தில் அழகாகப் படிந்து அதற்கு
அலாதி வசீகரமளிக்கிறது.




கோட்டி
ஏர்ஸ்பன்
பவுடர்

பூரண விநியோகஸ்தர்கள்:
[illegible] அண்ட் கோ லிமிடெட்
பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - லாகூர் - டில்லி